KALKI 16.10.88 ரூ. 2.

# கல்கி

## மாணவர் நகரம் மணிப்பால்

இலவச இணைப்பைக் கேட்டு வாங்குங்கள்.



# குட்டிக்யூரா அழகி




**குட்டிக்யூரா**
டால்க்

**இளம் பெண்கள் இதை
விரும்புவது இயற்கையே**

CHAITRA-B-MP-2 TMR



# “குழப்பங்களின் சிகரத்தில் கலைஞர்!”

-அப்துல் சமது

தி.மு.க.விற்கும் எங்களுக்கும் கருத்து வேறுபாடு திடீரென முளைத்து விட்டதாகவும், காங்கிரஸ்காரர்கள் என்னை விலைக்கு வாங்கி விட்டதாகவும் ஒரு பொய்ப் பிரசாரம் செய்யப்படுகிறது. உண்மை என்னவெனில், பல மாதங்களாகவே முஸ்லீம் லீகிற்கும் தி.மு.க.வுக்கும் பல்வேறு பிரச்னைகளில் கருத்து வேறுபாடு இருந்து வருகிறது:

- திமுக. கூட்டணியில் இ. கம்யூனிஸ்ட் உள்ளது. கேரளாவில் ஆட்சிக்கு வந்த இ. கம்யூனிஸ்ட் கட்சி, முஸ்லீம் லீக் கட்சியை எதிரியாகக் கருதுகிறது. அங்கே நிலைமை அப்படி இருக்கையில் தமிழ்நாட்டில் நாங்கள் எப்படி கம்யூனிஸ்டுகளுடன் கூட்டு வைத்துக் கொள்வது?

- ஜனாதிபதி தேர்தலில், ஷரியத் சட்ட விஷயத்தில் முஸ்லீம் நலன்களுக்கு எதிராகச் செயல்பட்ட கிருஷ்ண அய்யரை தி.மு.க. ஆதரித்தது.

- அதே ஷரியத் சட்ட விஷயத்தில், தி.மு.க. பாராளுமன்ற உறுப்பினர்கள் முஸ்லீம்களுக்கு ஆதரவாகச் செயல்படவில்லை. (வை. கோபால்சாமி மட்டும் நான் தனிப்பட்ட முறையில் கேட்டுக் கொண்டதற்கு இணங்க எங்களை ஆதரித்தார்)

போதாக்குறைக்கு தமிழக இ. கம்யூனிஸ்ட்காரர்கள் எங்களை எதிர்த்துத் தேர்தலில் போட்டி போடுவோம் என்று சொல்கிறார்கள். ஒரே கூட்டணியில் இருக்கும் ஒரு கட்சியைப் பார்த்து இப்படிச் சொன்னால் எப்படி? இதைப் பற்றியெல்லாம் கலைஞரிடம் பலமுறை கடிதம் மூலமும் நேரடியாகவும் கேட்டிருக்கிறேன். எனது கேள்விகளுக்கெல்லாம் பதில் சொல்லத் தெரியாமல் முழித்திருக்கிறார். இப்போது நான் மந்திரி பதவி கேட்டதாகக் கதையளந்து இருக்கிறார்.

இடையில் இந்தத் தேசிய முன்னணி வேறு. இதற்கு என்ன அவசரம் இப்போது? இந்தக் கூட்டணியில் தி.மு.க. சேர்வதற்கு தி.மு.க.வின் செயற்குழுவோ அல்லது பொதுக் குழுவோ கூடி ஒப்புதல் கொடுத்ததா? தொடர்ந்து இத்தனை வருட காலம் நம்முடன் இருந்திருக்கிறார்களே முஸ்லீம் லீக், அவர்களுடன் கலந்து ஆலோசித்துச் செயல்படலாமே என்று தோன்றியதா அவருக்கு? ஏதோ எடுத்தேன் கவிழ்த்தேன் என்ற ரீதியில் தேசிய முன்னணியில் தலையை நுழைத்திருக்கிறார். அதில் இருக்கும் எந்தக் கட்சிக்கும் தமிழ் நாட்டில் வேர் கிடையாது. ஏதோ கொஞ்சம் ஆதரவோடு இருக்கும் ஜனதா கூடக் கலைஞருக்கு எதிர்ப்புத் தெரிவித்து இருக்கிறது. 'ஷரியத் சட்டத்தில் முஸ்லீம் நலன்களுக்கு எதிராக இருந்த ஆரிப் முகமதுகானை அழைக்காதீர்கள்' என்றோம். எங்கள் வேண்டுகோளை ஊதித் தள்ளி விட்டார். குட்டக் குட்டக் குனிவதுதான் எங்கள் தலையெழுத்தா?

முஸ்லீம்களுக்கு ஆதரவாகத் தொடர்ந்து செயல்படுவோம்.... என்றெல்லாம் அறிக்கை விட்டிருக்கிறார். இப்போது, காலையில் ஒரு படவிழா, மாலையில் ஒரு படவிழா என்று கலந்து கொள்ளும் கலைஞர், பேசாமல் சினிமாத் துறையில் கவனத்தைச் செலுத்துவது நல்லது. இவ்வளவு வருடங்கள் கலைஞருடன் நான் பழகி இருக்கிறேன். குழப்பங்களின் சிகரத்தில் இருக்கிறார். அவருக்குத் தேவை நல்ல ஆலோசகர்.

எங்கள் கட்சியில் விரல் விட்டு எண்ணக் கூடிய ஒரு சிலர் 'தி.மு.கவுடன் உறவு தொடரும்' என்று சொல்லிக் கொண்டிருக்கிறார்கள். இப்படி கிறுக்குப் பிடித்து அலையும் சிலருக்குக் கட்சியின் செயற்குழு, பொதுக் குழு, சரியான பதில் கொடுக்கும்.

— தில்லப்பா



• உற்சாகம் கொப்பளிக்கும் மாணவர் கூட்டம்.

தெற்குக் கர்நாடகத்தில் கேரளத்தை ஒட்டினாற் போல் இருக்கிறது மங்களூர் துறைமுகம். அலைகள் தாலாட்ட, இங்கே மங்களாதேவி குடியிருக்கிறாள். மங்களூரிலிருந்து குறுகிய தூரத்தில் உடுப்பி, கமல், சுப்ரமண்யா என்று 'யாத்ரா ஸ்பெஷல்' விட வசதியாகப் பல புண்ணிய ஸ்தலங்கள். அழகும் அமைதியும் ததும்பும் இந்தப் பழம் பெரும் ஸ்தலங்களுக்கு இடையே உச்சந் தலையிலிருந்து உள்ளங் கால் வரை நவீனத்தைப் போர்த்திய ஒரு நகரம் — இளமைத் துள்ளலுடன், ஒரு தேன் கூட்டின் சுறுசுறுப்புடன் இயங்கிக் கொண்டிருக்கிறது. உடுப்பியிலிருந்து ஐந்தே கிலோ மீட்டர் தூரத்தில் உள்ள இந்நகரம்தான் மணிப்பால்.

மங்களூர் ரயில் நிலையத்தில் இறங்கிய போதே மணிப்பால் வாடையைக் கொஞ்சம் பிடித்துக் கொண்டோம். நாய்க் குட்டிகளை வாக்கிங் அழைத்துப் போவது போல் சக்கரம் பதித்த சூட்கேஸ்களின் வால்களைப் பிடித்துக் கொண்டு குறுக்கும் நெடுக்குமாக மாணவ மாணவிகள் நடந்து கொண்டிருந்தார்கள். ஒரு சிலரைத் தவிர எல்லோருமே வெளிநாட்டு மாணவர்கள். படு ஜாலியாகப் பேசிக் கொண்டே பஸ் ஸ்டாண்டை அடைந்து, மணிப்பால் பஸ்களை நிரப்பினார்கள்.

மொத்தம் பத்தாயிரம் பேரே வசிக்கும் மணிப்பாலில் முப்பத்தொன்பது கல்வி நிலையங்கள் — இவற்றில் இருபத்திரண்டாயிரம் பேர் வரை படிப்பதற்கு வசதி இருக்கிறது. பதினைந்து பள்ளிகள், பதினைந்து கல்லூரிகள் தவிர பலப் பல தொழில் கல்லூரிகள் உள்ளன. கல்வித் துறை சூப்பர் மார்கெட் மாதிரி ஒரே இடத்தில் வகை வகையான படிப்புப் படிக்க வசதிகள்.

மணிப்பாலில் இடறி விழுந்தால் ஏதாவது ஒரு மாணவர் மேல்தான் விழ வேண்டும்! ஆனால் அவர் அதற்காக உங்களிடம் சண்டைக்கு வர மாட்டார். சிரித்தபடி கை குலுக்கி விட்டுப் போய்க் கொண்டேயிருப்பார். ஆமாம்! மணிப்பாலின் இதமான சீதோஷ்ண விசேஷத்தாலோ என்னவோ மாணவர்கள் ஓர் அலாதியான நிறைவோடு காணப்பட்டார்கள் — தெருவோடு நடக்கையில் திடீரென்று மென்மையாக மழை பெய்ய ஆரம்பிக்கும். மாணவர்கள் கூட்டம் மழைக்குப் பயந்து ஒதுங்கவில்லை. நீரைத் தலையில் சொட்டுச் சொட்டாக வடிய விட்டுக் கொண்டு கும்மாளம் அடித்தபடி சென்றது.

மணிப்பாலைப் பற்றி உள்ளூர்வாசிகளிடம் அபிப்பிராயங்கள் சேகரித்தோம்.

'அடடா, இது நிஜமான சொர்க்கம்!'

'ஓ! இது இருபத்தோராம் நூற்றாண்டு நகரம்!'

'ஹாஸ்டல் தவிர, தனி வீடு எடுத்துக் கொண்டு மாணவர்களும் மாணவிகளும் ஒன்றாகத் தங்கிப் படிக்கிறார்கள். வெளி





• மருத்துவக் கல்லூரி.

# மாணவர் நகரம் மணிப்பால்

நாடு மாதிரிதான்!'

'டிரக் சமாசாரமெல்லாம் இங்கே கிடையாது!'

'நன்கொடை ( Capitation fees ) வாங்கிக் கொள்கிறார்கள். அதனால் என்ன? அத்தனையும் கல்வி நிலையங்களாக மாறியிருக்கின்றன, பாருங்கள். அதிலும் கல்வித் தரம் வெகு உயர்வு!'

சதீஷ் என்ற பொறியியல் கல்லூரி மாணவரைச் சந்தித்தோம்.

''பொறியியல் கல்லூரி சீட்டுக்கு அறுபதாயிரம், கம்ப்யூட்டர் சமாசாரமென்றால் எண்பதாயிரம் காபிடேஷன் ஃபீஸ்'' என்றார் சர்வ சாதாரணமாக.

விக்கித்துப் போனோம்.

''மற்ற கல்லூரிகளைப் பார்க்கையில் இது ரொம்பக் குறைவு. மேலும் தொகை முழுக்கக் கல்விப் பணிக்குப் பயன்படுத்தப்படுகிறது என்று எங்களுக்குத் தெரியும். மாணவர்களுக்கு நஷ்டமில்லை; சமுதாயத்துக்கு லாபம்.''

''யாருக்கும் விதிவிலக்கோ சலுகையோ கிடையாதா?''

''ஊஹூம். எல்லோரும் கொடுத்துத் தான் ஆக வேண்டும்.''

''வேறெதற்கெல்லாம் பணம் கட்ட வேண்டும்?''



• மணிப்பால் அருகே பாயும் நதி.

''ஹாஸ்டல் வாடகை, சாப்பாடு — இவற்றுக்கு வருட ஆரம்பத்திலேயே மொத்தமாகக் கட்டி விட வேண்டும்.''

''வெளிநாட்டு மாணவர்கள் எக்கச்சக்கமாக இருக்கிறார்களே?''

''மலேஷியா, இரான், ஆஃப்ரிக்கா, தாய்லாந்து, கொரியா, மிடில் ஈஸ்ட், அமெரிக்கா — என்று நிறைய நாடுகளிலிருந்து வருகிறார்கள்.''

''மாணவ மாணவிகள் ஒரே வீட்டில் தங்குவது பற்றி....''

''கஸ்தூர்பா மருத்துவக் கல்லூரி மாண



* ரமேஷ் பய்.



* சதீஷ்

வர்கள் மட்டும்தான் அப்படித் தங்கியிருக்கிறார்கள். அதில் ஒன்றும் தவறு இருப்பதாகத் தெரியவில்லை.''

''போதைப் பொருட்கள் உபயோகித்தவர்களை வெளியேற்றி அந்தப் பிரச்னைக்கு ஒரு முடிவு கட்டி விட்டதாக ஒரு பேராசிரியர் சொன்னாரே?''

''விதிமுறைகளின்படி போதைப் பொருட்கள் வைத்திருப்பவர் பிடிபட்டால் கடும் தண்டனையுண்டு. ஆனால் இதுவரை யாரும் வெளியேற்றப்பட்டதாக எனக்குத் தெரியவில்லை.''

''மாணவர்கள் கண்களையும், மனத்தையும் சுண்டியிழுக்க விஷயங்கள்?''

''இங்கே நகர வாழ்க்கை மாதிரி வசதிகள் இருந்தாலும், வேறு திசைகளில் கவனம் செலுத்த வாய்ப்பே இல்லை. பாருங்களேன், சினிமா தியேட்டர் கூடக் கிடையாது!''

''ரேகிங்...?''

''கிடையவே கிடையாது!''

''ஸ்ட்ரைக்?''

''கடந்த ஐந்து வருடங்களாக ஸ்ட்ரைக் என்ற பேச்சே இல்லை.''

''பரீட்சைகள்?''

''திட்டமிட்டபடி மே — ஜூன், நவம்பர் — டிசம்பரில் டாண் டாண் என்று நடந்து விடுகின்றன. நோ பிராப்ளம். கட்டாயமாக மூன்று இன்டர்னல் டெஸ்ட்டுகள் எழுதித்தான் ஆக வேண்டும். எழுபத்தைந்து பர்செண்ட் அட்டென்டென்ஸ் கண்டிப்பாகக் கொடுத்தாக வேண்டும்.''

''புரொபசர்கள், லெக்சரர்கள் எப்படி?''

''எல்லா இடத்திலும் நல்லவர்களும் இருப்பார்கள், மோசமானவர்களும் இருப்பார்கள். இங்கே முன்னவர்கள்தான் அதிகம்.''

ஒரு தனி மனிதன் மனக் வைத்தால், மண்ணைக் கூடப் பொன்னாக்கலாம் என்று யாராவது சொன்னால், ஏதோ ஓர் ஆவேசத்தில் சொல்லியிருப்பார் என்று, நம்புவது சிரமமானதாயிருக்கும். ஆனால், மணிப்பாலைப் பார்த்த பின் தனி மனித சாதனை சாத்தியமே என்று உறுதியாகத் தோன்றியது.

மருத்துவராக இருந்து கல்வியாளராக மாறிய டாக்டர் டி.எம்.ஏ. ஸ்பைதான் நவீன மணிப்பாலின் சிற்பி. சுமார் தொண்ணூறு வருடங்களுக்கு முன், எளிமையான குடும்பத்தில் பிறந்தவர். சமூகத்தை முன்னேற்றியே தீர்வது என்று விடாப்பிடியாக இருந்து, பள்ளிகள், கல்லூரிகள், வங்கிகள், மருத்து

## கிண்டல் — கண்டல்:

● கல்லூரிகளில் மாணவர்கள் எண்ணிக்கை குறைந்து வருகிறது. — துணைவேந்தர் கவலை.

*("அப்படி ஒன்றும் தெரியவில்லையே" என்கிறார் ஒரு தியேட்டர்காரர்.)*

● சென்னை மாநகரைச் சுத்தப்படுத்த மாநகராட்சி மேலும் ஆயிரம் துப்புரவுத் தொழிலாளர்களை நியமித்துள்ளது. — செய்தி.

*("அய்யய்யோ! தீபாவளிக்கு இனாம் கேட்க அதிகப்படியாய் ஆயிரம் பேரா?" என்று நடுங்குகிறார் ஒரு குடும்பத் தலைவர்.)*

● புத்தகம் இன்றிப் பள்ளி மாணவர்கள் அவதி — செய்தி.

*("பேப்பர்காரர்களுக்குத் தப்பு நியூஸ் போடு வதே வழக்கமாகிவிட்டது. புத்தகமில்லாததால் நாங்கள் மகிழ்ச்சியாய்த்தான் இருக்கிறோம்" — ஒரு பள்ளி மாணவன்.)*

— மௌஷ்மி.



# BONNY MIX®

## The new instant porridge. With the goodness of cereals, fruits and nuts.

Bonny Mix is a nourishing, easy-to-digest porridge made from wheat, corn, rice, coconut, apples, dates, raisins and cashewnut. It's good for the whole family at breakfast or in the evening after school or office. Also for elderly people and convalescents.




**Ready in minutes**

Bonny Mix is so quick and easy to prepare.
All you do is:




Put the required quantity of Bonny Mix into a bowl.




Add enough pre-boiled milk.




Mix into a smooth porridge.




Your family will love every delicious spoonful.

**Bonny Mix**®

*For the first time in India!*




**From Glindia Ltd (formerly Glaxo)**

The most trusted name in family foods.

Available in selected markets at present.

GL/2/88

வக் கல்லூரி, இஞ்சினியரிங் கல்லூரி, என்று ஒவ்வொன்றாகச் சும்மா கதவுகளைத் திறந்து கொண்டே போகிற மாதிரி, நிறுவனங்களைத் திறந்து வைத்தவர். கல்லும், மண்ணும், பாறையுமாக இருந்த மணிப்பாலை கல்வியுலகாய் மாற்றி உலகப் புகழ் பெற்ற, 'ரிப்ளியின் நம்பினால் நம்புங்கள்' தொகுப்பில் இடம் பெற்றிருக்கிறார். ஒரு டாக்டராக வாழ்க்கை ஆரம்பித்து வங்கி நிர்வாகியாகி, பதினைந்து பள்ளிகளும், பதினைந்து கல்லூரிகளும் திறந்த சாதனையாளராகவும் விளங்கினார் டி.எம்.ஏ. பை. மணிப்பாலில் அவருக்குச் சிலை வைத்து, அவர் வாழ்ந்த வீட்டை அருங்காட்சியகமாக அமைத்துள்ளார்கள்.

டி.எம்.ஏ. பையின் சகோதரர் மகன் ரமேஷ் பையைச் சந்தித்தோம். பல நிறுவனங்களில் இயக்குனராகப் பணிபுரியும் இவர் ஒரு சிறந்த நிர்வாகி:

"1953 இல் மணிப்பால் வெறும் கட்டாந்தரையாகத்தான் இருந்தது. அரசிடமிருந்தோ, பெரிய செல்வந்தர்களிடமிருந்தோ எந்த உதவியும் பெற்றுக் கொள்ளாமலே மணிப்பால் இந்த அளவுக்கு உருவாகியிருக்கிறது. இங்கே படிக்கும் நாலாயிரத்து ஐந்நூறு மாணவர்களுள் அறுநூற்றைம்பது பேர் இருபத்து மூன்று அயல்நாடுகளிலிருந்து வந்துள்ளவர்கள். இவர்கள் மூலம் ஆண்டொன்றுக்கு நாலு கோடி ரூபாய் அந்நியச் செலாவணி சம்பாதிக்கிறோம். இப்படிச் சம்பாதிக்கவில்லையென்றால் இங்கிலாந்து பொது மருத்துவ கவுன்சிலின் அங்கீகாரம் பெறும் தரத்தினதாக ஒரு மருத்துவ மனையை (கஸ்தூர்பா மருத்துவக் கல்லூரி மருத்துவமனை) இங்கே அமைக்க முடியுமா? வசதியுள்ள மக்களிடமிருந்துநிதி பெற்று நாங்கள் இப்பணிகளைச் செய்து வருகிறோம். அரசிடம் உள்ள நிதி பரம ஏழை மக்களின் மேம்பாட்டுக்குத்தான் பயன்படுத்தப்பட வேண்டும்" என்று கூறினார் ரமேஷ் பை.

அவரிடம் விடைபெற்றுக் கொண்டு மங்களூர் திரும்ப பஸ் நிலையம் நோக்கிச் சென்றோம். பளபளவென்று கட்டடங்கள், பாய்ந்து வந்த மாருதிகள், இதமான சீதோஷ்ணம், அமைதி கலந்த இயற்கை அழகு, இவற்றைப் பார்த்து அனுபவித்தபடி சென்றோம். அதி நவீன மணிப்பால் பவர் பிரஸ் (இங்குதான் இந்தியாவின் பல வங்கிகளுக்குச் செக் புத்தகம் அச்சடிக்கப்படுகிறது); பிரமாதமான அறைகளுடன் வேலி வ்யூ ஹொஸ்டெல் கிளப்; உலகிலேயே மிகப் பிரமாதமான மியூசியங்களுள் ஒன்றான அனாடமி மியூசியம்... என்று வரிசையாகப் பல எதிர்ப்பட்டன. மத ஒற்றுமையைப் பறைசாற்றுவது போல இந்து, முஸ்லிம், கிறிஸ்துவக் கோயில்களின் அமைப்புக்களை இணைத்த ஓர் அபூர்வ ஆலயமும் (அட்டைப்படம்) காட்சியளித்தது. ஏதோ ஒரு வெளிநாட்டின் குட்டி நகரத்தைச் சுற்றிப் பார்த்து விட்டுக் கிளம்புகிற மாதிரியான உணர்வுதான் ஏற்பட்டது. எங்கள் பஸ் புறப்பட்ட போது ஒரு மாணவர் கூட்டத்தின் உற்சாகமான சிரிப்பொலி காற்றில் கலந்து வந்து எங்கள் செவிகளில் அலைமோதியது.

— சாருகேசி,

அட்டை வண்ணப்படங்கள்,

இதர படங்கள்: யோகா

---

## அருள்வாக்கு

நம் மனஸ் ஏதோ ஒரு ஸந்தோஷ லாபத்தை அடைந்து அந்த அநுபோகத்தில் இன்னும் கொழுத்துப் போவதற்கு உதவும் எல்லா ப்ரியங்களும் காமத்தைச் சேர்ந்தவையே தவிர அன்பைச் சேர்ந்தவையல்ல.



மனஸின் கொழுப்பை இளக்கி, அது பிற்பாடு அப்படியே கரைந்து போய் விடுவதற்கு வசதியாக அதை எது மிருதுவாக்கித் தருகிறதோ அதுதான் அன்பு.

ஒன்று இல்லாமல் போவதற்கு முன்னாடி கொஞ்சம் கொஞ்சமாக லேசாகி, பரவிக் கொண்டே போக வேண்டும். அப்புறம்தான் அகண்டத்தில் அரூபமாக அப்படியே கரைந்து மறைந்து போவது. ஜலம் ஆவியாகி, இலேசாகிப் பரவிக் கொண்டே போனால்தான் இல்லாமல் போகிறது. அப்படித்தான் மனஸ் லேசாகிப் பரவுவதற்கு அன்பு என்று பெயர். காமத்திலே (ஆஸக்தியிலே) என்ன ஆகிறதென்றால், இலேசான ஆவியாகப் பரவுவதற்குப் பதில் கனமாகிக் கெட்டிப்பட்டு ஐஸ்கட்டி மாதிரி ஆகி விடுகிறது. ஜலமாவது உருகுகிற ஸ்வபாவமுள்ளதாக இருக்கிறது. ஆசை வாய்ப்பட்ட மனஸோ உருகாத ஐஸாக ஆகிவிடுகிறது!

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர ஸரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.

அமெரிக்கத் தேர்தல்:



• புஷ்



• டுகாகிஸ்

# பின்னாலிருந்து குழிபறிக்கும் வேலை கிடையாது!

**பல வருடங்கள் அமெரிக்காவில் இருந்த டாக்டர் எம். எஸ். உதய மூர்த்தி, அமெரிக்கத் தேர்தல் முறையை நமக்கு விளக்குகிறார். வருகின்ற நவம்பர் எட்டாம் தேதி நடக்க இருக்கும் அமெரிக்க ஜனாதிபதி தேர்தலை உலகம் ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டு இருக்கிறது.**

குடியரசுக் கட்சி, ஜனநாயகக் கட்சி என்று இரண்டே கட்சிகள்தான். தேர்தல் வருவதற்கு ஒரு வருடம் முன்பே 'பிரைமரி' என்று சொல்லப்படும், உட்கட்சித் தேர்தல்கள் நடக்க ஆரம்பித்து விடும். அமெரிக்க ஜனாதிபதி தேர்தல் முறையை அப்படியே இந்திய சூழ்நிலைக்குப் பொருத்திப் பார்க்கலாமா?

தற்போது எதிர்க்கட்சித் தலைவர்களாக உள்ள வி. பி. சிங்., ஹெக்டே, என். டி. ஆர். அஜீத்சிங், தேவிலால், வாஜ்பாயி, போன்றவர்கள் ஒரே கட்சியாக இணைந்து விடுகிறார்கள் என்று வைத்துக் கொள்ளுங்கள். — சும்மா உளவாக்கட்டிக்குத்தான்! இன்னொரு கட்சியில் ராஜீவ் காந்தி, நரசிம்மராவ், பூட்டாசிங், கமலபதி திரிபாதி, திவாரி, சிவசங்கர் முதலியோர் இருக்கிறார்கள். ஜனாதிபதி தேர்தல் வரப்போகிறது என்றவுடன், இரு கட்சிகளிலும் உள்ளவர்களில், யார் யார் ஜனாதிபதி தேர்தலுக்குப் போட்டியிடப் போகிறோம் என்பதை அறிவித்து விட வேண்டும். இரண்டு கட்சியிலும் தலா ஏழு பேர்கள் போட்டியிடப் போவதாகச் சொல்கிறார்கள் என்று வைத்துக் கொள்ளுங்கள். அந்தந்தக் கட்சியிலிருந்து சிறந்த நபரைத் தேர்ந்தெடுக்க உட்கட்சித் தேர்தல் நடத்தப்படும். இந்தத் தேர்தலின் போது, போட்டியிடும் ஆட்களைப் பற்றி நன்றாக அலசப்படும். டெலிவிஷனும், பத்திரிகைகளும் போட்டியிடும் நபர்களைப் பற்றி ஏராளமான தகவல்களைக் கொடுக்கும். போட்டியிடுபவர், தன்னைப் பற்றிய முழுமையான தகவல்களைச் சொல்ல வேண்டும். படிப்பு, அனுபவம், மனைவி, மக்கள் போன்ற சகல விவரங்களையும் மக்களின் முன் வைக்க வேண்டும். ஏதாவது பொய் சொன்னால் மாட்டிக் கொள்வார். ஒரு சராசரி அமெரிக்கன், தான் ஒழுக்கமாக இல்லாவிட்டாலும், நாட்டின் தலைமைப் பதவியை அலங்கரிப்பவர் நல்ல ஒழுக்கத்துடன் இருக்கிறாரா என்பதைப் பார்த்துத்தான் ஓட்டுப் போடுவான். ஒருவன் 'சின்ன வீடு' வைத்திருந்தால், அவன் மதிப்பு சரிந்துவிடும். இப்படித்தான் ஜனநாயகக் கட்சியைச் சேர்ந்த ஹார்ட் என்பவர் தமக்கு ஒரு பெண்ணுடன் இருந்த தொடர்பை மறைக்கப் போக செல்வாக்கு இழந்தார். இந்த விஷயம் அம்பலமாகாமலிருந் திருந்தால் ஹார்ட்தான் இப்போது குடியரசுக் கட்சி வேட்பாளரான ஜார்ஜ்

## ஜனநாயகக் கழுதையும் குடியரசு யானையும்





ஜனநாயகக் கட்சியின் தேர்தல் சின்னம் கழுதை. குடியரசுக் கட்சியின் சின்னம் யானை. இந்த இரு சின்னங்களும் தோன்றிய வரலாறு சுவாரஸ்யமானது:

*1828* — இல் ஜனாதிபதி தேர்தலுக்குப் போட்டியிட்ட ஆண்ட்ரு ஜாக்ஸனை 'அசட்டுக் கழுதை' என்று எதிர்க்கட்சியினர் வர்ணிக்க, அவரது ஜனநாயகக் கட்சியைக் கழுதையாகவே சித்திரித்துக் கேலிச் சித்திரங்கள் பல வரைய லானார் தாமஸ் நாஸ்ட் என்ற கேலிச் சித்திர நிபுணர். நாளடைவில் 'கழுதை'ச் சித்திரம் மிகப் பிரபலமாகிவிட்டது. இந்தப் பிராபல்யத் தைப் பயன்படுத்திக் கொண்டு, ஒரு வசவையே தங்களுக்குச் சாதகமாக்கிக் கொண்டனர் ஜன நாயகக் கட்சியினர்—ஆமாம்! கழுதையே அக்கட் சியின் தேர்தல் சின்னமாயிற்று!

இதே தாமஸ் நாஸ்ட், குடியரசுக் கட்சியின் பலத்தைக் குறிக்க, அதனை ஒரு யானையாக உரு வகப்படுத்திச் சித்திரம் வரைந்தார். 1874 — இல். பிரும்மாண்டமான அளவு வோட்டு வித்தியா சத்தில் வெற்றி பெற்ற குடியரசுக் கட்சியின் சின்னம் யானைச் சின்னமாகவே ஆகிவிட்டது.





புஷ்ஷோடு இறுதிக் கட்டத்தில் மோத வேண்டிய நிலையில் இருந்திருப்பார். ஆனால் அமெரிக்கப் பத்திரிகைகள் விழிப் புடனிருந்து பணியாற்றியதில் உட்கட்சித் தேர்தலிலே ஹார்ட் தோற்றுப் போனார்.

ஒவ்வொரு கட்சியிலும் பதிவு பெற்ற வாக்காளர்கள் இருப்பார்கள். உட்கட்சித் தேர்தல்களில் போட்டியிடுபவர்கள் எல்லா மாகாணங்களுக்கும் சென்று தங்கள் வெளி நாட்டுக் கொள்கை, மற்றும் பொருளாதாரக் கொள்கைகளை விளக்கிச் சொல்ல வேண் டும். பின்னர் தேர்தல் நடத்தப்படும். அதிக மாக வோட்டு வாங்கியவர்தான் அந்தக் கட்சியின் சார்பில் ஜனாதிபதி பதவிக்கு வேட்பாளராக நிறுத்தப்படுவார். இவ்வாறு வேட்பாளர் தேர்ந்தெடுக்கப்பட்ட பிறகு அக்கட்சியின் ஒரு பெரிய மாநாடு நடக்கும். அந்த மாநாட்டில், உட்கட்சித் தேர்தலில் தோற்றுப் போனவர்கள், ஜெயித்த நபரைப் பாராட்டிவிட்டு, முழு மனத்துடன் அந்த வேட்பாளர் வெற்றியடையப் பாடுபடு வோம் என்று ஆதரவு தெரிவித்து விட்டு, அதற்குண்டான வேலைகளைச் செய்வார் கள். பின்னால் பள்ளம் வெட்டும் கோழைத் தனமான காரியங்கள் அமெரிக்காவில் நடப்பதில்லை. கடைசியில், இரண்டு கட்சி களின் இறுதி வேட்பாளர்களும் ஜனாதிபதி தேர்தலில் போட்டியிடுவார்கள். இந்த இறுதித் தேர்தலில், ஒரு கட்சியின் பதிவு பெற்ற வாக்காளர், மாற்றுக் கட்சியின் வேட் பாளருக்கு வோட்டுப் போட உரிமை உண்டு!

தேர்தல் ஒரே நாளில் நடந்து முடிந்து, விடிவ தற்குமுன் முடிவுகள் அறிவிக்கப்பட்டுவிடும். தேர்தலன்று விடுமுறை.

இன்று ஜனநாயகக் கட்சியின் வேட்பாள ராகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருப்பவர் மைக் கேல் டுகாகிஸ். இவர் தற்போது ஒரு மாநி லத்தின் கவர்னராக இருக்கிறார். எதிர்த்து, குடியரசுக்கட்சியைச் சார்ந்தவரும் தற்போது உதவி ஜனாதிபதியாக இருப்பவருமான ஜார்ஜ் புஷ் போட்டியிடுகிறார்.

அமெரிக்க ஜனாதிபதி தேர்தலில் இன் னும் ஒரு சிறப்பு, தேர்தலில் குறிப்பிட்ட அளவு வோட்டு வாங்கினால், செலவு செய்த தொகையை அரசு கொடுத்துவிடும்.

தேர்தலுக்குச் சில நாட்கள் முன்பு அமெ ரிக்கப் பெண்கள் சங்கம் நடத்தும் டெலி விஷன் நிகழ்ச்சி மிகவும் புகழ்பெற்றது. இரண்டு கட்சிகளின் வேட்பாளர்களும், டெலிவிஷனில் தோன்றுவார்கள். பெண் கள் சங்கம் தேர்ந்தெடுத்த பத்திரிகையாளர் குழு, அவர்களைக் கேள்வி மேல் கேள்வி கேட்டுத் திணறடிக்கும். இது தவிர, இரு கட்சிகளின் இறுதி வேட்பாளர் களும் டெலிவிஷனில் தோன்றி ஒருவருக் கொருவர் கேள்விக் கணைகளை வீசி, விவா தம் செய்வார்கள். இந்த நிகழ்ச்சியில் வெளிப் படும் அறிவாற்றலும், பிரச்னைகளைச் சமாளிக்கும் சாமர்த்தியமும் மக்களால் எடை போடப்பட்டுத் தேர்தல் முடிவை நிர்ணயிக்கும்.

பேட்டி: **ப்ரியன்.**


முஸ்லிம் லீக்குடன் உறவு முறிந்தாலும் முஸ்லிம் சமூகத்திற்கு தி.மு.க.தான் சேவை செய்யும்!
இ.காங்கிரஸ்



சக்கச்சக்கமா தீனி போட்டுட்டேன்!.. பாலை (வோட்டை)க் கறக்க வேண்டியது உங்க பொறுப்பு!
ராஜீவ் தமிழக விஜயம்
தமிழக இ.காங்கிரஸ்
மக்கள் வரிப்பணம்
டி.வி. வானொலி பிரசாரம்



நாங்களாக இ.காங்கிரசுடன் உறவை முறித்துக் கொள்ளமாட்டோம்! நீங்களாக முறித்துக் கொண்டால் கவலை இல்லை!
ஷ்..ஷ் - போதும்! நாற்காலி பேச்சு இப்ப வேண்டாம்!
மூப்பனார்



# கல்கி

1988 அக்டோபர் 16
மலர் 47 இதழ் 11
விபவ புரட்டாசி 30



## அதர்மப் போக்கில் மேலும் ஒரு சாதனை!

ராமேசுவரம் பாலம் திறப்பு விழாவையொட்டி தமிழகத்தில் தேர்தல் பிரசாரம் செய்ய வந்த பிரதமர், கடந்த இருபது ஆண்டுகளில் தமிழகத்தில் ஒரு தேக்க நிலை ஏற்பட்டிருக்கிறது என்றும் இந்நிலையை மாற்றி மீண்டும் இம்மாநிலத்தைச் சுறுசுறுப்பான தொழில் வளர்ச்சிக் கேந்திரமாக உருவாக்கி இதர மாநிலங்களிடையே முன் போல முதலிடம் பெறச் செய்ய வேண்டும் என்றும் குறிப்பிட்டார். பாராட்டுக்குரிய வார்த்தைகள் தாம். 'தமிழக அரசியல் கட்சியினர் ஒருவர் மீது ஒருவர் அவதூறுகளைச் சுமத்தி அரசியல் சூழலை ஆபாசப்படுத்தி வருகின்றனர்; காங்கிரஸ் இத்தகைய காரியங்களில் இறங்காது; கண்ணியமாக நடந்து கொள்ளும்' என்றார். மகிழ்ச்சிக்குரிய விஷயம்தான். 'இலங்கையில் அமைதி திரும்பவும் தமிழர்கள் ஜனநாயக உரிமைகளைப் பெற்றுத் தன்மானத்துடன் வாழவும் தடையாக இருப்பது விடுதலைப் புலிகளும் அவர்களுடைய வன்முறைப் போக்கும்தான்' என்றார். உண்மைதான். இப்படி சில பல உண்மைகளை உரைத்ததற்காகவும் மகிழ்ச்சி தரும் செய்திகளைக் கூறியதற்காகவும் பிரதமரை வாழ்த்துகிற அதே நேரத்தில், பிரதமரின் இந்தத் தமிழக விஜயம் தார்மீக ரீதியில், சத்திய நெறியில் அமைந்திருந்ததா என்று பார்க்கும் போது விசனம்தான் ஏற்படுகிறது.

பிரதமருக்குப் பாதுகாப்பு என்ற சாக்கில் தேர்தல் பிரசாரத்துக்கு மக்களின் வரிப்பணம் வாரி இறைக்கப்பட்டிருக்கிறது. அரசு யந்திரத்தையும் அரசு வாகனங்களையும் விமானங்களையும் பிரதமர் முழுமையாகப் பயன்படுத்திக் கொண்டிருக்கிறார். பார்க்கப் போனால் ராமேசுவரம் பாலம் திறப்பு விழா கூடத் தேர்தலுக்கு முன் மக்களுக்கு நிறைவேற்றி வைக்கப்படுகிற ஒரு வசதியாக இருப்பதால் அதில் பிரதமர் பங்கேற்பதும் காங்கிரஸ் அரசின் சாதனையாகக் காட்டிக் கொள்வதும் பெரும் தவறு. திறப்பு விழாவை அங்கு பணியாற்றிய ஒரு தொழிலாளியைக் கொண்டு நடத்தியிருக்க வேண்டும். ஆனால் தமிழக மக்களின் அதிர்ஷ்டம், தேர்தலுக்கு முன் மீண்டும் இரண்டு மூன்று தடவை பிரதமர் தமிழகம் வருவார் என்று மூப்பனார் கூறியுள்ளார். எனவே, தேர்தலுக்கு முன் மேலும் பல சமுதாயத் திட்டங்களைப் பிரதமர் நிறைவேற்றி வைத்து விழா காண்பார் அல்லது, ஆரம்பித்து வைத்து விழாக்களில் பங்கேற்பார் என்று எதிர்பார்க்கலாம். கவர்னர் ஆட்சியைக் காங்கிரஸ் ஆட்சியாகவே கருதி, அவர் செய்துள்ள பணிகளுக்கெல்லாம் காங்கிரஸ் தலைவர்களும் மத்திய அமைச்சர்களும் பெருமையில் பங்கு போட்டுக் கொள்ளும் குற்றமும் தொடர்கிறது.

பிரதமரின், அவரது மனைவியின் பக்தி சிரத்தையை நாம் சந்தேகிக்கவில்லை எனினும் திட்டமிட்டது போல் அவர் கோயில், தர்கா, சர்ச் மூன்றுக்கும் விஜயம் செய்ததானது, தேர்தல் நோக்கில் எல்லா மதத்தவரையும் திருப்தி செய்யத்தான் என்ற எண்ணத்தை ஒதுக்க முடியவில்லை.

இதற்கெல்லாம் ஆதாரம் என்ன என்று கேட்டால், பிரதமரின் பேச்சிலேயே இருக்கிறது. நிருபர் ஒருவரது கேள்விக்குப் பதிலளிக்கையில், பிரதமர், "மக்களின் உற்சாகம் அமோகமாக இருக்கிறது; அதனை வோட்டுக்களாக மாற்ற வேண்டியது மூப்பனாரின் பொறுப்பு" என்று கூறியிருக்கிறார். தேர்தல் வெற்றியே தமது தமிழகச் சுற்றுப் பயணத்தின் பிரதான நோக்கம் என்று இதன் மூலம் தெளிவுபடுத்தியிருக்கிறார்.

மூப்பனாரின் பணியை இலகுவாக்க அரசு இலாக்காவான தூர்தர்சனும் அகில இந்தியா ரேடியோவும் போட்டி போட்டுக் கொண்டு உழைக்கின்றன. "மூப்பனாருக்கு ஜே!" கோஷம் உள்படப் பிரதமரின் தேர்தல் பிரசாரங்கள் முழுமையாக டெலிவிஷனில் ஒளி—ஒலி பரப்பப்பட்டன.

ஆக, ஆட்சிக்கும் கட்சிக்கும் வித்தியாசமின்றி மக்களின் வரிப்பணத்தையும், அரசு யந்திரத்தையும், பிரசார சாதனங்களையும், வண்டி—விமான வாகனங்களையும், அரசின் சாதனைகளையும் தேர்தல் நோக்கில் ஆளும் கட்சி பயன்படுத்திக் கொள்வது என்பது ராஜீவ் ஆட்சியில் முழுமை பெற்றுச் சர்வசாதாரண விஷயமாகி விட்டது. எதிர்க் கட்சிகளுக்குக் கிடைக்க முடியாத இந்த வசதிகளை நியாயமாகத் துறப்பதற்குப் பதில் அநியாயமாகப் பயன்படுத்திக் கொள்கிறார் பிரதமர். தேர்தல் கமிஷனின் எச்சரிக்கைகளையும் மீறிய இந்தச் செயல்களை அதர்மப் போக்கில் ராஜீவ் நிகழ்த்திய மற்றொரு சாதனையாகக் கருதலாம்.

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. — பாரதியார்.

துப்பறியும்

# சூர்யா – கிரண்

நவீன் பிரதாப் முல்லிக்.



























(தொடரும்)

மலர் என்பார்,
மதி என்பார்,
மயில் என்பார்.
எப்படி
அழைப்பினும்
கண்ணே,
ஈடில்லை எதுவும்
உனக்கு!

யுகு
ஸென்ஸேஷன்ஸ்
ஸாரிகள் மற்றும் டிரெஸ் மெட்டீரியல்ஸ்

மஃபத்லால்
—நம்பிக்கைக்குப் பெயர் பெற்றது




Location Courtesy: The Taj Mahal Hotel, Bombay.

MF 635 D TAM

## வட்டமேஜை

* இவ்வாரம் வெளியான சின்னச் சின்ன செய்திகள் பகுதியில் ஒரிசாவில் குல்தா கிராமத்தில் நடந்த சம்பவம் பற்றிப் படித்துச் சிலிர்த்துப் போனேன்... இந் நாட்டில் வஞ்சிக்கப்பட்ட பெண்கள், தாங்கள் சபிக்கப்பட்டவர்கள் என எண்ணாமல் சபிதாக்களாய் மாற வேண்டும்!

தஞ்சை, கவிஞர். வெற்றிப்பேரொளி.

* தபால் சட்டம் குறித்து வை. கோபால்சாமியின் வாதம் நியாயமாகவே படுகிறது. இதையும் பத்திரிகைகளும், பொது மக்களும் குரல் கொடுத்து வாபஸ் பெறச் செய்ய வேண்டும்.

என் தமிழ் என் மக்கள் — பட விமரிசனம் பக்கா தராசுத்தனம்...! (நடுநிலை!) கடைசி பாரா நெத்தியடி...! வெல்டன் ஜெயமன் மதலைசா...!

மதுரை — 20, செ. இலக்கணா.

* இருநூறு ஆண்டுகளுக்கு முன்பு அமெரிக்க ஜனாதிபதியாக இருந்த ஜேம்ஸ் மாடிஸன் தமது கருத்து இன்று மெய்யாகும் என்று நினைத்துத்தான் பார்த்திருப்பாரா...! தலையங்கத்தின் கடைசி வரிகள் மிக மிகப் பொருத்தமாக இருந்தன!!

சீர்காழி, சண்பை. சிவ. சண்முகம்.

* கண்ணுக்குத் தெரியாத அபாயங்கள் — மிக அழகான, அவசியமான கட்டுரை. அதைப் படித்தபின் நான் சென்னை வந்து குடியேறுவதையே மறுபரிசீலனை செய்கிறேன். சுற்றுச் சூழல் எப்படி மனிதர்களை ஆட்டிப் படைக்கும் என்பது நன்கு தெளிவாக்கப்பட்டுள்ளது. பயனுள்ள, எல்லாரும் அவசியம் படிக்க வேண்டிய கட்டுரை.

நாகப்பட்டினம், வே. உமா.

* நெஞ்சு பொறுக்குதில்லையே கதையை எழுதிய விவேக் சங்கர் அறிமுக எழுத்தாளரா? நம்ப முடியவில்லையே! நாம் சுதந்திரம் அடைந்து நாற்பதாண்டு காலமாகியும் அதன் நினைவாகப் பத்துப் பைசாவுக்கு ஒரு கொடி கூட வாங்க முடியாத ஏழைகள் நமது நாட்டில் இருக்கிறார்கள் என்பதை நினைக்கும் போது எனது நெஞ்சு பொறுக்கவில்லை! குமரன் வாங்கிய கொடி அவனது சட்டையின் கிழிசலையாவது அடைக்கப் பயன்பட்டது. ஆனால் நாம் வாங்கிய சுதந்திரம் நமது வறுமைக் கிழிசலை அடைப்பது எப்போது என நெஞ்சு பொறுக்காமல், ஆசிரியர் கேட்காமல் கேட்கிறாரோ?!

தக்கோலம், அ. முன்தபா.

* அறிமுக எழுத்தாளர் விவேக் சங்கர், ஓவியர் ஸ்ரீ. செ. மூர்த்தி அகியோர் இணைந்து இவ்வாரக் கல்கி இதழுக்குப் பெருமை கூட்டியுள்ளார்கள். கண்ணீரைக் கூடத் தத்ரூபமாக உணர்த்தியுள்ள ஓவியரின் திறனுக்கும் நெஞ்சுருகச் செய்த கதாசிரியரின் திறனுக்கும் ஒரு சபாஷ்.

திருச்சி — 2, பானை அசோக்.

* சத்யா ஸ்ரீனிவாசனின் 'அப்பா' நடமாடும் — நிஜமான, யதார்த்தமான 'அப்பா'!

சென்னை — 49, மயிலை, கோபி.

* செழியன் பேட்டி படித்தேன். கலைக்கப்பட்ட தமிழகச் சட்டமன்றத்தில் ஜனதா கட்சி சார்பாக இருந்த மூன்று பேர்களும் இப்போது மூன்று கோஷ்டிகளாக இருக்கிறார்கள். இந்த நிலையில், "...அப்படியே இந்த இழிவுகளைத் தாங்கிக் கொண்டாலும், பாதிக்குப் பாதி இடங்களையா விட்டுக் கொடுக்கப் போகிறார்கள்...?" என்று செழியன் கூறுவது நகைப்பிற்கிடமாக மட்டுமல்ல, பரிதாபமாகவும் இருக்கிறது.

சிறுமுகை, ஜி. சுதிரேசன்.

* கருணாநிதி தம்மை இழிபிறவி எனக் கூறியதற்காக வருந்தும் செழியனிடம் ஒன்று கேட்க விரும்புகிறேன்: தங்கள் கட்சியின் மாநில நிர்வாகி ஒருவர் அதே பாணியில் கருணாநிதியை மிகக் கொச்சையாகப் பட்டி மன்றங்கள் மூலம் திட்டிய போது, அதைத் தங்கள் கவனத்துக்குக் கொண்டு வந்த போதும், அதைத் தடுக்காமல் மௌனமாக இருந்தது ஏன்?

சிதம்பரம், சி. ராஜ்குமார், மாவட்ட ஜனதா செயலாளர்.

* இந்த வார இதழில் ஜனதா தலைவர் இரா. செழியன் பேட்டியைப் படித்தேன். தங்களது ஆணித்தரமான கேள்விகளுக்கு அவரது ஆழமான பதில்கள் அருமையாக இருந்தன. தமிழக ஜனதா தொண்டர்கள் குழப்பத்தில் மிதக்கும் இந்த நேரத்தில் தாங்கள் செழியனைப் பேட்டி கண்டு பிரசுரித்தது பாராட்டத்தக்கது.

அரக்கோணம், எஸ். பி. வெங்கட்ராமன்.

* இதழ் கண்டேன். அதன் ஆழம் கண்டேன். அற்புதங்கள் கவைத்தேன். பதவியில் இருந்தாலும் இல்லாவிட்டாலும் சிலர் பதறாமல், சிதறாமல் இருப்பர். அதற்குச் செழியன் நல்ல உதாரணம். அவரது பேட்டி அவரைச் சிறந்த 'பார்லிமென்டேரியன்' என்று எடை போட வைக்கிறது.

சென்னை — 5, சித்ரபானு.

## சிலிர்க்க வைத்த சம்பவம்!

* தீர்க்கதரிசியான கல்கி அவர்கள் 1950—ஆம் வருடம் "காதறாக் கள்ளன்" கதையை எழுதும் போது, இனி வரும் ஆண்டுகளில், இந்திய சமுதாயம் மகாத்மா, காந்தியை ஞாபகம் வைத்துக் கொள்ளுமா என்று சந்தேகத்துடன் கேட்டிருக்கிறார். நாம் காந்தியை மறந்தது மட்டுமல்ல, அவர் வாங்கிக் கொடுத்த சுதந்திரத்தின் மகத்துவத்தையும் பெருமையையும் மறந்து ஜாதிச் சண்டையும் கட்சிச் சண்டையும் போட்டுக் கொண்டு நாட்டையே கடன் சுமையில் திவாலாக்கும் நிலைமைக்கு வந்திருக்கிறோம் என்பதை உணரும் போது வருத்தம் மிதமிஞ்சிப் போகிறது.

சென்னை — 41, திருமதி விஜயம்.

அட்டைப்படம்:

* இடது பாதம் தூக்கி ஆடும் நடராஜப் பெருமானின் நடனத்தில் மனம் குவிய மேலட்டையைப் புரட்டவே மனம் வராது!

அருள்வாக்கு:

* காஞ்சி முனிவரின் வண்ணப் படம்; அருளுரை.
* ஜெயேந்திரர், சங்கரானந்தேந்திரர் வண்ணப்படங்கள்.

ஆன்மிகம்:

* ஷீர்டி பாபா — வண்ணப் படம்: லதா
* அண்மையில் கும்பாபிஷேகம் கண்ட திருவாரூர் தியாகராஜர் வண்ணப்படம் மற்றும் திருத்தலக் காட்சிகள்: தனுசு.

புராணம்:

* உத்தர ராமாயணம் தெரியும்; இது வேறு ஓர் அபூர்வமான அற்புத ராமாயணம்! வண்ணப்படங்கள்: வினு.

தலயாத்திரை:

* உடுப்பி மத்து கிருஷ்ணரை நேரில் தரிசிப்பது போல் வண்ணப்படம்.

விமரிசையான வண்ணப் படங்களின் வரிசை!

# கல்கி தீபாவளி மலர்-1988

அழகிய இந்தியா:

* பாரதத்தின் எழில்களை வண்ணங்களில் வடித்துத் தருபவர்: கே. வி. ஆனந்த்.

நகைச்சுவை:

* ஓவியர் உமாபதியின் வண்ணச் சிரிப்பு; மற்றும் அரசியல் கார்ட்டூன்.

கலை:

* யக்ஷகானம் என்ற புத்துயிர் பெற்ற அபூர்வக் கலை இதயத்தை மட்டுமல்ல, அதன் வண்ணங்களால் கண்ணையும் பறிக்கும்! வண்ணப்படங்கள்: யோகா.

இலக்கியம்:

* மீ. ப. சோமு தேர்ந்தெடுத்த பொறுக்கு மணியான கவிதைகளுக்கு எடுப்பான வண்ணச் சித்திரங்கள் தீட்டியிருப்பவர் கோபுலு.

அமரர் கல்கி:

* தவுல் கந்தப்பப்பிள்ளை கூறிய கதைகள் வரிசையில் மூன்றாவதான "நாடகக்காரி" — அமரர் கல்கியின் குறுநாவல், ம. செ. தீட்டிய வண்ணச் சித்திரங்களுடன் ஜொலிக்கிறது.

மற்றும்: —

* கவிமலர்; கோகுலம் பக்கங்கள்; மங்கையர் மலர்; ஏராளச் சிறுகதைகள்; கட்டுரைகள்; புகைப்படங்கள்; பிரபஞ்சன் எழுதிய குறுநாவல்.

---

இப்போதே உள்ளூர் ஏஜெண்டிடம் பதிவு செய்து கொள்ளுங்கள். விலை ரூ. 3
ரிஜிஸ்தர் தபாலில் பெற ரூ. 37 அனுப்பவும். மானேஜர், கல்கி, சென்னை — 600 0

# அருள்மிகு வேங்கடாசலபதி சுவாமி திருக்கோயில்

# ஒப்பிலியப்பன் கோவில்

## திருநாகேஸ்வரம் அஞ்சல்

## கும்பகோணம் வட்டம்

## தஞ்சை மாவட்டம்-612 204.

## அன்புடையீர்,

தென்திருப்பதி, திருவிண்ணகர், பூலோக வைகுந்தம் என்றெல்லாம் புகழ்ந்து போற்றப்படும் இத்திருத்தலம் 108 வைணவத் திவ்ய தேசங்களில் ஒன்றாக மூர்த்தி, தலம், தீர்த்தம் என்ற மூன்றாலும் சிறந்து ஆழ்வார்களுள் நம்மாழ்வார், திருமங்கையாழ்வார், பொய்கையாழ்வார், பேயாழ்வார் ஆகியோரால் மங்களாசாசனம் செய்யப்பெற்றது. இத்தலத்துப் பெருமானுக்கு நிகரான தெய்வம் இல்லை (ஒப்பில்லா அப்பன்) எனப் பொருள்பட ஸ்ரீ ஒப்பிலியப்பன் என ஆழ்வார் திருப்பாசுரங்களிலும், உப்பில்லாத உணவையே உவந்து ஏற்பதாக உறுதி பூண்டமையால் ஸ்ரீஉப்பிலியப்பன் என்றும் மஹாவிஷ்ணு இத்தலத்தில் திருநாமம் பெறுகிறார்.

வேண்டுவோர்க்கு வேண்டுவன அனைத்தும் வழங்கி அருள்பாலிக்கும் கண்கண்ட தெய்வமான ஸ்ரீஒப்பிலியப்பன், ஸ்ரீபூமிதேவி, சமேதராய் ஒரே சன்னதியில் எழுந்தருளியுள்ளார். பக்தர்களின் பல்வேறு பிரார்த்தனைகளையும் தவறாது நிறைவேற்றி முற்றிலும் ஒரு பிரார்த்தனை தலமாக விளங்கும் இத்திருக்கோயிலில் ஒரே சன்னதியில் எழுந்தருளியுள்ள பெருமாள், தாயார் இருவருக்கும்

### கோடி அர்ச்சனை

கடந்த 30.7.88-ந் தேதியிலிருந்து ஸ்ரீமத் அழகிய சிங்கர் சுவாமிகள், ஸ்ரீமத் ஆண்டவன் சுவாமிகள் ஆகியோரின் அருளாசியுடன் சிறப்பாக நடைபெற்று வருகிறது.

பெருமாள், தாயார் இருவருக்கும் முறையே ஒவ்வொரு சகஸ்ரநாமம் கொண்ட அர்ச்சனை ஒன்றுக்கு கட்டணம் ரூ.40-00 மட்டுமே.

கோடி அர்ச்சனையில் ஒரு பகுதியாக ஜென்ம நட்சத்திர அர்ச்சனை என்ற திட்டத்தின் கீழ் அவரவர் ஜென்ம நட்சத்திர நாள்தோறும் 12 மாதங்களுக்கு அர்ச்சனை செய்து கொள்ள (12x40) ரூ. 480-00 மட்டுமே. தங்கள் பெயர், நட்சத்திரம் இதர விபரத்துடன் நிர்வாக அதிகாரியின் பெயருக்கு, திருநாகேஸ்வரம் இந்தியன் வங்கியில் மாற்றத்தக்கதான செக், ட்ராப்ட், மற்றும் எம்.ஓ. ஆகியவற்றை அனுப்பி ஸ்ரீபூமிதேவி சமேத ஸ்ரீஒப்பிலியப்பனின் அருட்கடாட்சத்துக்கு பாத்திரராகும்படி 25 ஆண்டுகளுக்கு பின் நிகழும் இக்கோடி அர்ச்சனையில் பங்கு கொள்ள அனைவரையும் அன்புடன் அழைக்கிறோம்

பி. வாசுதேவன் எம்.ஏ.பி.எல்.,
நிர்வாக அதிகாரி.

சி. பாலசுப்பிரமணியன்.
தக்கார்/உதவி ஆணையர்

மற்றும் ஆலயப் பணியாளர்கள்.



# மனைவி ஒரு மந்திரி







நம்பியாருக்கு இந்தப் படத்தில் ஒரு வித்தியாசமான பாத்திரம் வழங்கப் பட்டிருக்கிறது என்பதைத் தவிர கதையில் வளைவுகளோ, ஆழமான சங்கதிகளோ இல்லை.

எஸ். வி. சேகர், எஸ். எஸ். சந்திரன் — அவ்வப்போது கிச்சுகிச்சு மூட்டுகிறார்கள். அதுவும் தற்போதைய தமிழக அரசியலின் பின்னணியில் எழுதப்பட்ட வசனங்களுடன். கோவை சரளா பேசுகிற வசனங்கள் — விரசம் என்பதை விட இன்னும் மோச மான வார்த்தை ஏதாவது இருந்தால் சொல்லுங்களேன்.

ஆறுதலான விஷயம் — ராம்கி அண்ட் சீதா ஜோடி. ராம்கி சிலம்புச் சண்டை, ஏணிச் சண்டை என்று அற்புதமாகச் சுழல்கிறார். குரலில் ஒரு கவர்ச்சி இருக்கிறது. 'என்னைப் பார்க்காமல் போறியே, இது நியாயமா?' என்கிற ரசிக்க முடிகிற ஒரே டூயட் பாடலில் அட்டகாசமாக ஆடுகிறார். சீதா — ராம்கிக்குத் தோதாக ஊடல்கள் நன்றாகவே செய்கிறார். காய்கறி வியாபார பேரச் சவடால் காட்சி ஒரு உதாரணம்.

லலிதகுமாரிக்கு இந்தப் படத்தில் நடித்ததில் ஒரு லாபம். ஒரு சீன் பாக்கி இல்லாமல் ஏதாவது தின்று கொண்டே இருக்கிறார். அவர் செந்தில் மேல் கண்டதும் காதல் கொண்டதும், ஒரே செகண்டில் சரளா கல்யாணத்தை முடித்து விடுவது உ.ம. பேத்தல் (உ.ம. = உலகமகா)

மற்றும் சில உ.ம. பேத்தல்களாவன: நம்பியாரின் சாமியார் வேஷம், உயிலில் குறிப்பிடும் கண்டிஷன், அதற்காக மூன்று ஜோடிகளின் தீவிர முயற்சி, சீக்கிரம் குழந்தை பிறக்க வேண்டும் என்று எஸ். வி. சேகர், மாதுரியை வலி வருவதற்கு முன்பே பிரசவத்திற்கு ஆட்படுத்துதல்... இப்படி இந்த இதழ் கல்கி முழுவதும் சொல்லிக் கொண்டே போகலாம்.

பின் குறிப்பு: ராம. நாராயணன் ஒரு காலத்தில் ஒரிரு நல்ல படங்களைத் தந்திருக்கிறார் என்று தெரிய வருகிறது.

— ஜெயமன்மதன்.

# நங்கைநல்லூர் நாயகி



• கோவில் வெளித்தோற்றம்.

'அம்பிகையைச் சரண் புகுந்தால் அதிக வரம் பெறலாம்' என்று மகாகவி பாரதியார் பாடியது இன்று நங்கைநல்லூரில் மெய்யாகிக் கொண்டிருக்கிறது. மீனம்பாக்கம் விமான நிலையம் அருகிலுள்ள நங்கைநல்லூர் என்ற புனித க்ஷேத்திரத்தில் அம்பிகை எழுந்தருளியுள்ளதே அடியார்கள் பெற்ற வரம் என்றுதான் சொல்ல வேண்டும். மனித குலத்துக்குத் தன் அருளைப் பொழிய சுயம்புவாக யாக குண்டத்திலிருந்து தோன்றிய திருவுருவம் நங்கைநல்லூர் ஸ்ரீ ராஜ ராஜேஸ்வரி.

பூஜ்யரான ஸ்ரீ ராஜ கோபால ஸ்வாமிகள் சிறு குழந்தையாக இருந்த போதே அன்னையின் அருளுக்குப் பாத்திரமாகி, முப்பத்தைந்து ஆண்டுகளுக்கும் மேலாக விதிப்படி அம்பாளை ஆராதித்து வந்தார். ஒரு நவராத்திரியில் சண்டீ ஹோமம் செய்து பூர்ணாஹுதி முடிந்த பின்னர் ஸ்வாமிகள் பிரஸாதம் விநியோகித்துக் கொண்டிருந்த போதுதான் அக்னி ஜ்வாலையின் மீது அற்புத ரத்தினக் கல் வடிவமாக உதித்தாள் அம்பிகை.

அக்னியிலிருந்து சுயம்புவாகத் தோன்றிய ஸ்ரீ ராஜராஜேஸ்வரியை முன்னிட்டு மேரு வடிவமாகவே கட்டப்பட்ட கோவில் நங்கைநல்லூர் ஸர்வமங்களா ராஜ ராஜேஸ்வரி கோவில். இந்த தேவியின் விக்ரக வடிவத்தை ஸ்ரீவித்யா உபாசனையின் புறத்தோற்றமாக, ஸ்தூல வடிவமாகக் கொள்ளலாம்.

எத்தனையோ கோவில்களில் ஸ்ரீ சக்ர ப்ரதிஷ்டை செய்யப்பட்டிருக்கும். மேருவும் தனியாக இருக்கும். ஆனால் 43 கோணங்களையும் அமைத்து 43 சக்தி தேவதைகளின் யந்திரங்களையும் பிரதிஷ்டை செய்து, ஸப்த மாதாக்களின் யந்திரங்களும், மனோன்மணி, மஹாலக்ஷ்மி யந்திரங்களும் முறைப்படி ஸ்தாபித்துக் கட்டப்பட்ட கோவில் — நங்கை நல்லூர் தவிர வேறு எங்குமே இல்லை என்று சொல்லலாம்.

எல்லாவற்றுக்கும் சிகரமான பிந்து ஸ்தானத்தில் ஸகல உலகங்களையும் ஈன்றெடுத்த அன்னையும், எல்லா உலகங்களையும் ஆட்சி செய்யும் அகிலாண்டேச்வரியுமான ராஜ ராஜேஸ்வரி வீற்றிருக்கிறாள். அவளைத் தரிசனம் செய்ய நங்கை நல்லூர் செல்கிறோம்.

கோவில் வாசலில் குங்குமம், கல்கண்டு மட்டுமே விற்கிறார்கள். தேங்காய், பழம் கூட அடியார்கள் கொண்டு போக வேண்டியதில்லை. மிகவும் சுத்தமாகச் செய்யப்பட்ட குங்குமத்தை வாங்கிக் கொண்டு ஸர்வ. மங்கள கணபதியைத் தரிசனம் செய்து பிரார்த்தித்துக் கொள்கிறோம். அருகம் புல்லை அழகாகத் தொடுத்து ஆரமாக்ச் சாத்தியிருக்கிறார்கள்.

அமைதியும் அருளும் குடிகொண்டு ஆரவாரம் இல்லாமல் விளங்குகிறது கோவில். அஞ்சனா நந்தனரான ஆஞ்சனேயர் சந்நிதியில் தொழுது விட்டு, கருவறையை நெருங்குகிறோம். தரிசிக்க வந்திருப்பவர்கள் மௌனமாகச் செல்வது அதிசயமாக இருக்கிறது.



• அம்பிகை.

சந்த்ரகலாதரியான அன்னையைத் தரிசிக்க பதினாறு படிகள் ஏறிச் செல்ல வேண்டும். செப்புத் தகடு போடப்பட்டு மின்னும் இப் படிகளுள் ஒவ்வொன்றிலும் அமாவாசை முதல் பௌர்ணமி வரையிலான திதி தேவதைகளின் சக்தி யந்திரங்கள் பிரதிஷ்டை செய்யப்பட்டிருக்கின்றன. ஏறும் போது பூர்வ பக்ஷம், இறங்கும் போது அமர பக்ஷம். ஒவ்வொரு படியிலும் அகஸ்திய முனிவர் பாடியதாகச் சொல்லப்படும் ஷோடச மாலையின் பாடல்கள் பதிக்கப்



நவரத்ன பீடத்தில் நிறைந்து நின்ற
நாற்பத்து முக்கோண நவர் சக்தி
கவர்ணையாய் கனகசபை தன்னில்வாழும்
சோதியே மனோன்மணியே கழினை
வாழ்வே!



* ராஜகோபால சுவாமிகள்.

பெற்றிருப்பதைப் பார்க்கிறோம்.

நம் முன்னால் செல்பவர்கள் தரிசனம் செய்து கொள்ளும் வரை காத்திருக்கிறோம். தனித் தனியாக அர்ச்சனை செய்வதில்லை இக் கோயிலில். அடியார்களின் பெயர் நக்ஷத்திரங்களைக் கேட்டுக் கொள்கிறார்கள். அர்த்த ஜாமத்தின் போது, அடியார்கள் சமர்ப்பித்த குங்குமத்தால் அர்ச்சனை செய்கிறார் சுவாமிகள். ரொம்ப நல்ல ஏற்பாடு. கோயிலும் கருவறையும் மிகவும் தூய்மையாக இருக்கின்றன.

தீபாரதனை காட்டி தேவியின் சிறப்புக்களை எடுத்துச் சொல்லும் போதே அர்ச்சகருடைய பக்தி சிரத்தையை நாம் உணர முடிகிறது.

மூலவரான அம்பிகையும், அருகிலேயே அமர்ந்துள்ள ஸர்வமங்களா ராஜராஜேஸ்வரியும் நம் உள்ளம் ஒருமுகப்படச் செய்கிறார்கள். ஒரு காலை மடித்து இன்னொரு பாதம் பத்மத்தில் வைத்து மங்கள தேவதையாக வீற்றிருக்கும் கோலத்தை, ஸ்ரீ ராஜ ராஜேச்வரியை, நாளெல்லாம் தரிசித்துக் கொண்டே இருக்கலாம். எதிரே சிறிய அளவில் ஒரு மேருவையும் தரிசிக்கிறோம்.

**ஸ்ரீ** வித்யா உபாஸனையின் பயனை அடைந்தவரும், பல மகான்களின் அருள் உபதேசம் பெற்றவரும், காமகோடி ஆச்சாரியரின் அன்புக்குப் பாத்திரமானவருமான ஸ்ரீ ராஜ கோபால சுவாமிகள் காட்சிக்கு எளியவராக இருக்கிறார்.

இவருடைய இறைப் பணி கடல் கடந்து பரவியிருக்கிறது.

ஸர்வமங்களா மிஷன் என்று ஒரு புனிதப் பணி செய்யும் சங்கத்தை அமெரிக்க நாட்டில் காலிபோர்னியாவில் தொடங்கியுள்ளார். அங்கு த்யான வகுப்புக்கள் நடக்கவிருக்கின்றன. ஸர்வமங்களையான ராஜராஜேச்வரியின் அருள் அங்கும் பரவவிருக்கிறது. அன்னைக்குக் கோவில் கட்ட ஏற்பாடுகள் நடந்து வருகின்றன.

**ந**வராத்திரி புண்ணிய காலத்தில் (10.10.88 — 21.10.88) நங்கை நல்லூரில் தினமும் யாகங்கள் பூஜைகள் நடைபெறுகின்றன. ஸ்ரீ வித்யா யக்ஞம், நவாபரண பூஜைகள் நடைபெறுகின்றன.

அக்டோபர் இருபதாம் தேதியன்று ஸ்ரீ மஹா சண்டியாகம் நடைபெறவிருக்கிறது. தேவியின் பக்தர்கள் எல்லா வைபவங்களிலும் கலந்து கொள்ளலாம். வேறு எந்தக் கோவிலிலும் இல்லாத பல சிறப்புக்களை உடைய இந்தக் கோவிலில் நவராத்திரியில் பிரும்மோத்ஸவமும் ஒரு தனிச் சிறப்பு. ஒவ்வொரு நாளும் தேவி 'திருவீதி உலாப் போந்து அருள்புரிய நானே வந்து விட்டேன்; தரிசித்துக் கொள்ளுங்கள்' என்று சிரத்தை இல்லாதவர்களுக்குக் கூட அருள் புரிகிறாள்.

நங்கை நல்லூரில் குடிகொண்டுள்ள ஸர்வமங்களா ராஜராஜேச்வரியை ஒரு முறை தரிசித்தால் ஐம்பத்தோறு சக்தி பீடங்களைத் தரிசித்த பலனை அடையலாம் என்கிறார்கள்.

**— ஆனந்தி**

வண்ணப்படம் மற்றும் புகைப்படங்கள்:
**யோகா**

---



மாஜி மந்திரியின் மனைவி: நீங்களும் மந்திரியா இருந்து, என்ன பிரயோஜனம்?

மாஜி மந்திரி: ஏன், நிறையத்தானே சம்பாதிச்சேன்!

மாஜி மந்திரியின் மனைவி: ஹூம், ஒரு விசாரணைக் கமிஷன் கூட உங்க பேர்ல இல்லையே...?

— ஆர். வசந்தகுமார்.

தரத்தை நாடுவோர்
தவறாமல் சுவைப்பது
ஸாய் கிருஷ்ணா ஸ்வீட்ஸ் & ஸ்நாக்ஸ்

உங்கள் குடும்பத்தில் எல்லோரும் விரும்பிச் சுவைக்கும்
உயர்ந்த ரக இனிப்பு, காரவகை பட்சணங்கள்
அனைத்தும் ஒரே இடத்தில் அளிக்கும் முகவரி:

# ஸாய் கிருஷ்ணா
## ஸ்வீட்ஸ் & ஸ்நாக்ஸ்

**(AIR-CONDITIONED)**




57-A சுப்ரமணியம் தெரு,
அபிராமபுரம்
(சி.பி. ராமஸ்வாமி
ரோடு அருகில்)
சென்னை-600 018

தொலைபேசி:
**458407**

பண்டிகை மற்றும் விழா நாட்களுக்கும், கல்யாண
சீர்வரிசைகளுக்கும் ஆர்டரின் பேரில் உயர்தரமான,
சுவைமிக்க இனிப்பு மற்றும் காரவகை பட்சணங்கள்
செய்து தரப்படும்.

இன்றே வாருங்கள் — எங்களது முறுக்கு, தட்டை,
தேங்குழல், முள்முறுக்கு, சீடை, அதிரசம், அப்பம்,
வெல்ல சீடை, மனோகரம், மாலாடு, ரவா லாடு, பால்
ஹல்வா, பாம்பே ஹல்வா, திரட்டுப்பால், ரஸ்மலாய்,
பாதாம் கீர், பாஸந்தி, குலாப் ஜாமன் மற்றும்
பல்வேறு இனிப்பு, காரவகைகளை உங்கள்
குடும்பத்துடன் உண்டு மகிழ.

# காரணம் கேட்காதீர்கள்!

**வா**சலில் அவர்கள் கார் வந்து நின்றது.

எல்லோருமாக "வாங்கோ! வாங்கோ!" என உபசாரம் செய்யும் குரல் கேட்டது.

என்னையும் அறியாமல் என் உடல் முழுவதும் வியர்த்து விட்டது. நெற்றியில் முத்து முத்தாகத் துளித்திருந்த வியர்வையை என் கைக்குட்டையால் மெதுவாக ஒத்தி எடுத்தேன்.

எல்லாக் கல்லூரிகளுக்கும் இடையே — நூற்றுக்கணக்கான மாணவர் மத்தியில் — நடத்தப்பட்ட பேச்சுப் போட்டியில் கலந்து கொண்ட போதுகூட, எனக்கு இப்படி ஒரு பதற்றம் ஏற்பட்டதில்லை.

எம். எஸ்ஸி. இரண்டாம் ஆண்டு பரீட்சை. முதலிடம் எனக்கா, என் தோழிக்கா என்ற சவால். அவசரம் அவசரமாக நான் விடைத் தாட்களை நிரப்பிக் கொண்டிருக்க, என் மனத்திற்குள் என் தோழி என்னை முந்தி விடுவாளோ என்ற பயம் இருந்தது. இருந்தாலும் என் மனம் தன் நிதானத்தை இழக்கவில்லை.

ஆனால் இன்று...

என்னுடைய வருங்கால வாழ்க்கை நிச்சயிக்கப்பட இருக்கிறது. இன்னும் அரை மணியில் முடிவு தெரிந்து விடும்.

பெண் பார்க்க வந்திருப்பவர்கள் என் தந்தைக்கு அறிமுகம் ஆனவர்கள்தான். மிகவும் நல்லவர்கள் என



## போட்டிக்கதை — 7

அப்பா சொல்லியிருந்தார். வரதட்சிணை பிரச்னை அடியோடு இல்லை. ஜாதகம் கொடுத்த போதே சந்தேகத்திற்கு இடமின்றிச் சொல்லி விட்டார்கள்.

'இப்போது நேரில் —

என்ன கேட்பார்கள்...? பாடச் சொல்வார்களா...? அம்மா என்னை அதற்குத் தயார்ப்படுத்தியிருந்தாள்: 'பாவயாமி' என்று பெரிதாக எடுத்து விடாதே. மூச்சு வாங்கும். சின்னதாக — அழகாக 'மாயே' மட்டும் பாடு. உன்னுடைய சாரீரத்தை நன்றாக எடுத்துக் காட்டும்!''

நானும் திருப்பித் திருப்பிப் பாடி என்னைத் தயார்ப்படுத்திக் கொண்டிருந்தேன்.

வந்திருப்பவர் அவர்கள் குடும்பத்தில் கடைசிப் பிள்ளை. இவருக்கு மூத்தவர்கள் எல்லோரும் அமெரிக்காவில் இருக்கிறார்கள். இவர் இங்கே 'பிஸினஸை'க் கவனித்துக் கொள்ளப் போகிறாராம். பிள்ளைக்குக் கல்யாணம் முடிந்த கையுடன் பெரியவர்கள் அமெரிக்கா போய்விடப் போகிறார்கள்.

இந்தப் பெண் பார்க்கும் படலம் கூட வெறும் சம்பிரதாயத்துக்காகத்தான். இந்தக் கூத்து நடந்து முடிந்தவுடன் முகூர்த்தத் தேதி பார்க்கப் பஞ்சாங்கத்தைக் கையில் எடுத்து விடுவார்கள் என எனக்குத் தெரியும்.

''கண்ணம்மா! அவர்கள் வந்து விட்டார்கள்...'' எனச் சொன்னபடி அப்பா என்னை அழைக்க —

அம்மா எனக்குப் பின்னால் பெரும் பலமாக நிற்க —

கையில் பழங்கள் நிரம்பிய தட்டை ஏந்தி, நான் குனிந்த தலை நிமிராமல், அந்த அறைக்குள் நுழைந்தேன்.

தட்டை அம்மா சொன்னபடி கூடத்தின் நடுவில் வைத்துவிட்டு, அடுத்தபடி என்ன செய்வது எனத் தெரியாமல் நின்றேன்.

''வெட்கப்படாதே... தைரியமாக உட்கார்!'' — என்றது பிள்ளையின் அம்மாவாக இருக்க வேண்டும்.

''நிமிர்ந்து பார் அம்மா...! இவன் தான் என் பிள்ளை முரளி. பெங்களூரில் எம். எஸ்ஸி. முடித்துவிட்டு, ஹோசூரில் ஒரு ஃபாக்டரி நடத்துகிறான்... பக்கத்தில் இருப்பவன் என் தங்கை பிள்ளை ஹரி. அந்தக் கம்பெனியில் அவனும் ஒரு பார்ட்னர்'' — பையனின் அப்பா தொடர்ந்தார்.

என் தலையை மெதுவாக நிமிர்த்தினேன்... முரளியை, முன்பு பார்த்த போட்டோவை வைத்துக் கொண்டு



# ஸரோஜி

அடையாளம் காண முடிந்தது.

பக்கத்தில்... 'இவர்தான் ஹரியா?''

வெறித்துப் பார்க்கிறேன் என்ற நினைவே இல்லாமல் அவரையே நான் பார்த்தபடி இருந்தேன்.

"என்ன ஹரி...? எப்படி முரளியின் வுட்—பி?'' எனக் கேட்டார் பெரியவர்.

''முரளி லக்கி ஃபெலோ மாமா... இவன் வழுக்கை மண்டைக்கும் தொப்பைக்கும் ரதி மாதிரி இப்படி ஒரு பெண்ணா? 'லக்கி!'' என்றார் ஹரி.

''தனக்குக் கல்யாணம் ஆகல்லியேன்னு இந்தப் பயலுக்கு வயிற்றெரிச்சல் அப்பா...! பார்க்க சினிமா ஹீரோ மாதிரி இருக்கானே ஒருத்திபோட நிறுத்திப்பானான்னு எல்லோரும் பயப்படறா.'' என்று பதிலடி கொடுத்தார் முரளி.

எல்லோரும், 'கொல்'லென்று சிரித்தார்கள் — என்னைத் தவிர.

என் கண்கள் மீண்டும் ஹரியை ஆராய்ந்தன... நல்ல உயரம்... கருகருவென்று சுருட்டை முடி. சிவந்த முகத்தில் உதட்டோரம் பாத்தி வெட்டியதுபோல் அழகான மீசை. இயல்பாகவே மிளிர்ந்த புன்னகை. எல்லாவற்றையும் விட அந்த ஆண்மை — பிடரியைச் சிலிர்த்து நிற்கும் சிங்கத்தை நினைவூட்டியது.

அவர் முன்பு முரளி, வாசலில் உள்ள பிரம்பு நாற்காலியில் உட்கார்ந்திருந்த 'பாமரேனியன்' நாய்க் குட்டியைத்தான் நினைவுபடுத்தினார். நான் என்ன செய்யட்டும்?

என் மனத்தை நான் அடக்க முயற்சி செய்தேன். பார்வையை அந்தப் பக்கத்திலிருந்து விலக்கிப் பார்த்தேன். பொல்லாத கண்கள் எங்கு வட்டமிட்டாலும் திரும்பத் திரும்ப ஹரியின் பால் வந்து நிலைத்தன.

''ஒரு பாட்டு பாடுகிறாயா?'' என முரளியின் அப்பா கேட்க —

முரளி சட்டென்று, ''அதெல்லாம் எதற்கு...? தினமும் பாடச் சொல்லிக் கேட்டுக் கொண்டா உட்கார்ந்திருக்கப் போகிறோம்?'' என்றார்.

''அவனுக்கும் ஔரங்கசீப்புக்கும் இந்த விஷயத்தில் ஒற்றுமை. நீங்கள் பாடுங்கள்.'' — என உற்சாகப்படுத்தினார் ஹரி.

நான் ''மாயே!'' எனப் பாடத் தொடங்கினேன்.

பல முறை பாடிய பாட்டுதான். எனக்கும் பழகியதுதான். இருந்தும் கூட மனத்தில் சற்றுச் சலனம் இருந்ததால் கொஞ்சம் தடுமாற்றம். முடிக்கும் போது கொஞ்சம் சுருதி விலகியது.

சட்டென்று 'தருநஹோதயே ஸுதா தரங்கிணிமாயே!' எனக் கம்பீரமாக ஹரி எடுத்து முடிக்க, நான் பிரமித்துப் போனேன்.

இத்தனை அற்புதமான குரலா?

ஹரிக்குப் பாட்டு என்றால் உயிர்... ரொம்பவும் நன்றாகப் பாடுவான்.''

''ஆமாம்... ஆமாம்... இப்போ கூட யாராவது பாடச் சொல்ல மாட்டாங்களான்னு காத்துக் கொண்டிருக்கிறான். அப்புறம் இரண்டு மணி நேரம் ததரினனா...னு இழுத்து ஆளைக் கொன்று விடுவான்... என்றார் முரளி.

என் மனத்தில் ஒரு விபரீதமான கற்பனை பிறந்தது.

நான் மிஸஸ் முரளியாகி இரண்டு மாதங்கள் ஆகின்றன. நான் மட்டும் வீட்டில் தனியாக இருக்கின்றேன். வாயிற்கதவு தட்டும் சப்தம் கேட்டு, நான் திறக்க, ஹரி நுழைகிறார்.

எங்கள் கண்கள் சந்திக்கின்றன. என் மனம் அவரையும் முரளியையும் ஒப்பிட்டுப் பார்க்கிறது.

ஹரி என்னை நெருங்கி என் தோள் மேல் தன் கரத்தை வைக்கிறார். என் மற்றொரு கையால் அந்தக் கரத்தை விலக்க நான் செய்யும் முயற்சிக்கு என் மனமே உட்பட மறுக்கிறது.

அப்புறம்...? அப்புறம்...?

நினைக்கவே கூசிய என் மனம் நிகழ் காலத்திற்குத் திரும்பியது.

''அப்புறம் என்ன ...? சம்பிரதாயம் எல்லாம்தான் முடிந்து விட்டதே... பஞ்சாங்கத்தை எடு... ஒரு நல்ல முகூர்த்தமாகப் பார்க்கலாம்...'' — முரளியின் அப்பா.

''ஒரு முகூர்த்தம் பார்த்தால் போதாது. ஒன்பது முகூர்த்தம் பாருங்கள். அந்த முகூர்த்தங்கள் ஒன்றிலாவது நமக்குச் சரியான கல்யாண மண்டபம் கிடைக்கிறதான்னு பார்க்க வேண்டும்... கல்யாண மார்க்கெட் அத்தனை பிஸி!'' என்றார் ஹரி.

''அத்தனை பிஸி மார்க்கெட்டிலும் நீ விலை போகவில்லையே!'' எனக் கேலி செய்தார் முரளி.

''அதற்கென்ன செய்வது? எத்தனையோ பேர் கண்ணிருந்தும் குருட்டு ஜன்மமாக இருக்கிறார்கள்... மயிலை விட்டு விட்டு வான்கோழி பக்கம் சாய்கிறார்கள்!'' என ஹரி பதில் சொன்னார்.

இது எனக்காகச் சொல்லப்பட்ட வார்த்தைகளா?

என் அம்மாவிடம் 'நாம் போகலாம்'

---

''ஆல் இண்டியா ரேடியோ செய்திகள்; வாசிப்பது ராமலிங்கம்... மன்னிக்க வேண்டும். செய்திகள்; வாசிப்பது ராமசாமி!''

— போடி. ப்ரியபாரதி.



என ஜாடை காட்டுகிறேன். இருவருமாக உள்ளே போகிறோம்.

''அம்மா... முகூர்த்த தேதி எதுவும் இப்போ நிச்சயம் செய்ய வேண்டாம்.''

''ஏண்டி...?''

''அப்புறம் எல்லாம் விவரமாகச் சொல்றேன். நீ அப்பாவிடம் எப்படியாவது சொல்லி விடு.''

''ஏன் இப்படிச் சொல்கிறாய்?'' எனக் கேட்டார் அப்பா திகைத்துப் போய்.

''எனக்குக் கொஞ்சம் அவகாசம் தேவை,'' என்றேன் நான்.

''அவர்களிடம் என்ன சொல்வது...? எப்படிச் சொல்வது...? என்ன நினைப்பார்கள்...?''

''டாடி... ப்ளீஸ்... அலௌ மீ ஸம் மோர் டைம்!'' எனக் கெஞ்சினேன்.

அப்பா அவர்களிடம் என்ன போய்ச் சொன்னாரோ... ''ஓகே... அப்புறமா நீ எனக்கு எ்ழுது!'' எனப் பெரியவர் சொல்லி விட்டு எழுந்திருக்க, மற்றவர்கள் பின் தொடர்ந்தார்கள்.

அடுத்த நிமிஷம் அத்தனை பேரும் என்னைச் சுற்றி...

''நல்ல குடும்பம்... நல்ல சொத்து... நல்ல படிப்பு... நல்ல வேலை...'' என்று அப்பா அடுக்கிக் கொண்டே போனார்.

''எல்லோரும் சிரித்த முகத்துடன் நன்றாகப் பழகுகிறார்கள்!'' என்று அம்மா பக்க வாத்தியம் வாசித்தாள்.

''அந்த 'ஹரி' ரொம்ப ஸ்மார்ட். ஐ லைக் ஹிம்!'' என என் தம்பி சொன்னவுடன் நான் அவனைத் திரும்பிப் பார்த்தேன், மலர்ச்சியுடன்.

அப்பா என் மன ஓட்டத்தைப் புரிந்து கொண்டு விட்டார் உடனே...

''அப்படியானால் நீ ஹரியைப் பார்க்கலாம் என்று சொல்கிறாயா?'' என நேரடியாகக் கேட்டு விட்டார்.

அப்படி நடந்துவிட்டால்...? நான் நினைத்துப் பார்க்கிறேன்.

நான் மிஸஸ் ஹரி ஆனது முரளிக்குப் பெருத்த ஏமாற்றம். இந்த ஏமாற்றம் அவர்கள் 'பிஸினஸ்'ஸில் ஒரு சிறு விரிசலை உண்டாக்குகிறது. இந்த விரிசல் பெரிதாகப் பெரிதாக ஹரியின் முகத்தில் வழக்கமான சிரிப்பு மறைந்து கடுகடுப்பு பரவுகிறது.

முரளி 'பார்ட்னர்ஷிப்'பைக் கத்தரித்துக் கொள்கிறார்.

ஹரிக்கு நான் வேம்பாகக் கசக்கிறேன். எந்தக் கரம் என்னை அரவணைத்துச் செல்லும் என நினைத்தேனோ அதுவே என்னை உதாசீனம் செய்கிறது...

''என்ன யோசனை அப்படி...? ஹரியைப் பார்க்கலாமா என்று அப்பா கேட்கிறார்'' என அம்மா எனக்கு ஞாபகப்படுத்தினாள்.

நிதானமாக — உறுதியாக நான் பதில் சொன்னேன்:

''இந்தச் சம்பந்தமே வேண்டாம்... காரணம் கேட்காதீர்கள்!''




## அத்தியாயம் 41

## மதுராந்தகன் நன்றி

முதன் மந்திரியின் கரம் மதுராந்தகன் மேல் பட்டதும் அவன் அலறினான்.

"ஐயா! அப்பா! செத்தேன்! என்னைத் தொட வேண்டாம். என் கால்கள்! போச்சு! போச்சு!" என்று கூவினான்.

அநிருத்தர் அவனைத் தூக்குவதை நிறுத்திவிட்டு, "இளவரசே! தங்களுக்கு என்ன நேர்ந்தது? தங்கள் கால்களுக்கு என்ன நேரிட்டது?" என்று கவலையுடன் கேட்டார்.

"என் கால்கள் முறிந்தே போய் விட்டன. நடக்க முடியவில்லை; நிற்கவும் முடியவில்லை!"

முதன் மந்திரி திரும்பிப் பார்த்து, "அடே! பல்லக்கை இவ்விடம் கொண்டு வாருங்கள்!" என்று தம் ஆட்களுக்குக் கட்டளையிட்டார்.

பின்னர், "ஐயா! இந்த விபத்து எப்படி நேர்ந்தது? தாங்கள் மழையில் தனியாய்க் கிடக்கும் காரணம் என்ன? தங்களோடு வந்த பரிவாரங்கள் எங்கே? தங்களை இவ்விதம் விட்டு விட்டு அவர்கள் எப்படிப் போகத் துணிந்தார்கள்? அவர்களுக்கு என்ன தண்டனை விதித்தாலும் போதாதே!" என்றார்.

"முதன் மந்திரி! யாரையும் தண்டிக்க வேண்டாம்! யார் பேரிலும் குற்றம் இல்லை. மாலை நேரத்தில் குதிரை மேல் ஏறிக் கொண்டு நான்தான் தனியாகக் கிளம்பினேன். நதிக்கரையோரமாகப் போய்க் கொண்டிருந்தேன். திடீரென்று மழை பிடித்துக் கொண்டது. ஒரு பெரிய இடி இடித்து மின்னல் மின்னியது. குதிரை மிரண்டு ஓடியது. நான் இந்த மரத்தின் கிளையில் சிக்கிக் கொண்டு கீழே விழுந்து விட்டேன். குதிரை எங்கேயோ போய் விட்டது. விழுந்த வேகத்தில் கால் முறிந்து விட்டதோ அல்லது சுளுக்கிக் கொண்டு விட்டதோ தெரியவில்லை. எழுந்து நிற்கவும் முடியவில்லை. நல்ல வேளையாகத் தாங்கள் இச்சமயம் இங்கு வந்தீர்கள்!"

"ஏதோ தங்களுடைய தந்தை, மகானாகிய கண்டராதித்த தேவர் செய்த புண்ணியந்தான், இந்த மட்டும் நான் இங்கே வரும்படி நேர்ந்தது! கொஞ்சம் பல்லைக் கடித்துக் கொண்டு பொறுத்திருங்கள். பல்லக்கில் தங்களை ஏற்றி விடுகிறேன். மற்ற விவரங்கள் எல்லாம் நாதன் கோவிலில் அடியேனின் இல்லத்துக்குப் போன பிறகு கேட்டுத் தெரிந்து கொள்கி

அமரர் கல்கி

றேன்'' என்றார் அநிருத்தர்.

பல்லக்கு அருகில் கொண்டு வந்து இறக்கப்பட்டதும் முதன் மந்திரி இள வரசரை மெதுவாகப் பிடித்துத் தூக்கிப் பல்லக்கினுள் கிடத்தினார்.

ஆட்களிடம், பல்லக்கைத் தூக்கிக் கொண்டு மெள்ள மெள்ள அசங்காமல் போக வேண்டும் என்று கட்டளையிட்டார். தாமும் பல்லக்கின் அருகிலேயே தொடர்ந்தாற்போல் நடந்து சென்றார்.



றிது நேரத்துக்கெல்லாம் நாதன் கோவில் என்று வழங்கிய சுந்தர சோழவிண்ணகரத்துக்கு அவர்கள் வந்து சேர்ந்தார்கள். அந்த ஊர்ப் பெருமாள் கோயிலுக்கு அருகில் முதன் மந்திரி அநிருத்தரின் மாளிகை ஒன்று இருந்தது. அதற்குள் இளவரசர் மதுராந்தகரைத் தூக்கிச் சென்று அங்கிருந்த கட்டிலில் கிடத்தினார்கள்.

விளக்கு வெளிச்சம் கொண்டு வரச் சொல்லிப் பார்த்ததில் கால் முறியவில்லையென்றும் வெறும் சுளுக்குத்தான் என்றும் தெரிந்தது.

இளவரசர் கொண்டிருந்த பீதியும் சிறிது தெளிந்தது.

பெருமாள் கோவிலிலிருந்து வந்த பிரசாதங்களை இருவரும் அருந்தினார்கள்.

பின்னர் முதன் மந்திரி, "இளவரசே! இனி இரவு நிம்மதியாகத் தூங்குங்கள்! பொழுது விடிந்ததும் தங்கள் உசிதம் எப்படியோ அப்படிச் செய்யலாம். நான் தஞ்சைக்குத்தான் போகிறேன். என்னுடன் வருவதாயிருந்தால், தங்களைப் பத்திரமாய்க் கொண்டு போய்ச் சேர்ப்பிக்கிறேன்'' என்றார்.

"ஐயா! தாங்கள் எனக்கு எவ்வளவோ தீங்கு செய்திருக்கிறீர்கள். அதற்கெல்லாம் பரிகாரம் இன்று செய்து விட்டீர்கள். இன்று எனக்குச் செய்த உதவியை என்றும் மறக்க மாட்டேன். அதற்கு எப்போதும் நன்றி செலுத்துவேன். ஒருவேளை இந்தச் சோழ சாம்ராஜ்யத்தின் சிம்மாசனத்தில் நான் அமரும்படி நேர்ந்தால் தங்களையே முதன் மந்திரியாக வைத்துக் கொள்வேன்!'' என்றான் மதுராந்தகன்.

அநிருத்தர் அதிசயக் கடலில் முழுகிப் போனதாகப் பாவனை செய்து, "இளவரசே! சோழ குலத்துக்கு நான் கடமைப்பட்டவன். இந்தக் குலத்தைச் சேர்ந்தவர்களுக்கெல்லாம் ஆலோசனை சொல்வதும் இயன்ற உதவி செய்வதும் என் கடமை. ஆகையால் தாங்கள் தனிப்பட எனக்கு நன்றி செலுத்த அவசியமில்லை. ஆனால் தங்களுக்கு நான் ஏதோ தீங்கு செய்திருப்பதாகச் சொன்னீர்களே! அது தான் எனக்கு விளங்கவில்லை. நான் தங்களுக்கு மனமறிந்து எந்தத் தீங்கும் செய்ததாக ஞாபகமில்லை. தாங்கள் சற்றுப் பெரிய மனது செய்து தெரியப்படுத்தினால் அதற்குப் பிராயச்சித்தம் என்ன உண்டோ அதைச் செய்து விடலாம்!'' என்றார்.

"ஐயா! அநிருத்தரே! தாங்கள் மகா கெட்டிக்காரர், அறிவாளி, இராஜதந்திரநிபுணர்என்பதெல்லாம் உலகமறிந்த விஷயம். ஆனால் தங்கள் கெட்டிக்காரத்தனத்தை என்னிடம் காட்ட வேண்டாம். தாங்கள் எனக்குச் செய்திருக்கும் தீங்கு எவ்வளவு கொடுமையானது என்பது எனக்குத் தெரியாது என்றும் எண்ண வேண்டாம், ஆனாலும் இன்று தாங்கள் எனக்குச் செய்த உதவியை முன்னிட்டு அதையெல்லாம் மறந்து விடப் போகிறேன். என்னுடைய நன்றியைத் தங்களுக்கு எந்த விதத்தில் தெரியப்படுத்தலாம் என்று சொல்லுங்கள். ஏதாவது பிரதி உபகாரம் செய்யக் கூடியது இருந்தால் கூறுங்கள்!''

அநிருத்தர் புன்னகை புரிந்து, "ஆம், இளவரசே! தங்கள் நன்றியைச் செலுத்த வழி ஒன்று இருக்கிறது. தங்களிடம் இந்தக் கிழவன் கோர வேண்டிய வரம் ஒன்று இருக்கிறது. இனி இம்மாதிரி குதிரை ஏறித் தனி வழியே கிளம்ப வேண்டாம். முன்னும் பின்னும் பரிவாரங்கள் சூழ ரதத்தில் பிரயாணம் செய்யுங்கள். அதைவிடப் பல்லக்கில் பிரயாணம் செய்வது நலம். காலம் கெட்டிருக்கிறது. பல

காரணங்களினால் மக்கள் மனக் கொதிப்பு அடைந்திருக்கிறார்கள். இன்றைக்குப் பழையாறையில் பார்த்தீர்களே! ஆகையால் திறந்த பல்லக்கில் பிரயாணம் செய்வதைக் காட்டிலும் மூடு பல்லக்கில் பிரயாணம் செய்வது இன்னும் நல்லது. பழுவூர் இளைய ராணியின் பல்லக்காக இருந்தால் ரொம்ப விசேஷமாயிருக்கும். யாரும் சந்தேகிக்கவே மாட்டார்கள்!'' என்றார்.


துராந்தகன் அசந்து போனான். அவன் முகத்தில் மறுபடியும் பயத்தின் அறிகுறி காணப்பட்டது. சற்றுப் பொறுத்துச் சமாளித்துக் கொண்டு, "முதன் மந்திரி! என்ன வார்த்தை சொன்னீர்! பழுவூர் இளைய ராணியின் மூடு பல்லக்கில் என்னைப் பிரயாணம் செய்யச். சொல்வதின் கருத்து என்ன? என்னை அவமானப்படுத்துவது உமது நோக்கமா?......'' என்றான்.

"இளவரசே! பழுவூர் ராணியின் பல்லக்கில் பிரயாணம் செய்வதைத் தாங்கள் அவமானமாகக் கருதுவதை நான் அறியேன். எப்போதிருந்து இந்த எண்ணம் தங்களுக்கு உண்டாயிற்று? முன்னேயெல்லாம் அடிக்கடி தாங்கள் அவ்விதம் போய்க் கொண்டிருப்பது வழக்கமாயிருந்ததே? கடைசியாக, கடம்பூர் சம்புவரையர் மாளிகைக்குப் போய்த் திரும்பிய பிறகு இந்த நல்ல முடிவுக்குத் தாங்கள் வந்திருக்க வேண்டும்......''

மதுராந்தகன் மேலும் திகில் கொண்டான். அவன் முகத்தில் பயப் பிராந்தியின் சாயல் பரவிற்று.

"முதன் மந்திரி! கடம்பூர் மாளிகைக்கு நான்...... நான்......'' என்று தடுமாற்றத்துடன் ஏதோ சொல்லுவதற்கு ஆரம்பித்தான்.

"இளவரசே! கடம்பூர் மாளிகைக்குத் தாங்கள் ஆடி மாதம் பதினெட்டாம் பெருக்கு அன்று தனாதிகாரி பெரிய பழுவேட்டரையருடன் போயிருந்தீர்கள் அல்லவா? அதைத்தான் சொல்கிறேன். அப்போது தாங்கள் இளையராணியின் பல்லக்கிலேபோய் விட்டுத் திரும்பினீர்கள். அது எனக்கு அவ்வளவாகப் பிடிக்கவில்லைதான். பல்லக்குப் பிரயாணம் என்னைப் போன்ற கிழவர்களுக்கு உகந்தது. தங்களைப் போன்ற இளைஞர்கள் யானை மீதோ குதிரை மீதோ பிரயாணம் செய்வதுதான் உசிதம். ஆனால் குதிரைப் பிரயாணத்துக்குத் தகுந்த பயிற்சி வேண்டும். தங்களுக்கு உடம்பு சரியானதும் நானே அதற்கு வேண்டிய ஏற்பாடு செய்கிறேன்......''

"அன்பில் அநிருத்தரே! ஜாக்கிரதை! மேலும் மேலும் என்னை அவமானப்படுத்தும் வார்த்தைகளைச் சொல்லுகிறீர். இன்றைக்கு ஏதோ இந்த அசந்தர்ப்பம் நேரிட்டு விட்டபடியால் எனக்குக் குதிரை ஏற்றமே தெரியாது என்று முடிவு கட்டி விட்டீர். ஏதோ ஒரு சமயம் பல்லக்கில் சென்றபடியால் எப்போதும் பழுவூர் ராணியின் மூடு பல்லக்கில் நான் போவதாகச் சொல்லுகிறீர். உம்முடைய பிராயத்தையும் இன்றைக்கு நீர் எனக்குச் செய்த உதவியையும் நினைத்துப் பொறுத்தேன்.....''

"இளவரசே! தங்களுடைய பொறுமை எனக்கு மிக்க மகிழ்ச்சி தருகிறது. 'பொறுத்தார் பூமி ஆள்வார்' என்பது முதுமொழி. தமிழகத்தின் மாபெரும் புலவர் என்ன கூறுகிறார்?

'அகழ்வாரைத் தாங்கும் நிலம்
போலத் தம்மை
இகழ்வாரைப் பொறுத்தல் தலை.'

நிலம் தன்னைத் தோண்டுகிறவர்களைப் பொறுத்துக் கொண்டிருக்கிறது. பொறுத்துக் கொள்வது மட்டுமா? தோண்டுகிறவர்களுக்குத் தூய தண்ணீரையும் அளித்து உதவுகிறது. பூமிக்கு உள்ள இந்தக் குணம் பூமியை ஆள நினைப்பவர்களுக்கும் இருக்க வேண்டும். என்னைப் போன்ற கிழவன் ஏதாவது அனுசிதமாகச் சொன்னாலும் பூமி ஆள விரும்பும் தாங்கள் பொறுத்துக் கொள்ளுவதுதான் உசிதம்.''

"ஐயா! என்ன சொல்கிறீர்? நான்

இந்தச் சோழ சாம்ராஜ்யத்தை ஆள விரும்புவதாகக் குற்றம் சாட்டுகிறீரா?'' என்று கேட்டான் மதுராந்தகன். அவனுடைய உதடுகள் துடித்தன. புருவங்கள் நெரிந்தன. பயம் கோபமாகவும் ஆத்திரமாகவும் மாறி வந்ததென்பதற்கு அறிகுறிகள் தென்பட்டன.

ஆனால் முதன் மந்திரியோ சிறிதும் பதற்றமில்லாமல், ''இளவரசே! குற்றம் சாட்டுகிறேன் என்று ஏன் சொல்லுகிறீர்கள்? தாங்கள் இந்தச் சோழ சாம்ராஜ்யத்தை ஆள விரும்பினால், அது எப்படிக் குற்றமாகும்? வீராதி வீரரான விஜயாலய சோழரின் குலத்தில் உதித்தவர் தாங்கள். மகானாகிய சிவஞான கண்டராதித்தரின் திருப்புதல்வர். இந்தச் சோழ சிம்மாசனம் ஏறுவதற்குத் தங்களுக்குப் பூரண உரிமை உண்டு. அதைத் தாங்கள் விரும்புவது குற்றம் எப்படி ஆகும்? அது குற்றம் என்றும், ஆகையால் அதற்காக இரகசியமான சதி முயற்சிகளில் ஈடுபடவேண்டும் என்றும் யாராவது தங்களுக்கு யோசனை சொன்னால் அதைத் தாங்கள் நம்ப வேண்டாம், இளவரசே! இந்தக் கிழவனுடைய வார்த்தையைக் கொஞ்சம் செவி சாய்த்துக் கேளுங்கள். தங்களுடைய பெற்றோர்களின் விருப்பம் ஒருவிதமாயிருந்தது. தாங்களும் அதற்கு இணங்கிச் சிவபக்தியில் ஈடுபட்டிருந்தீர்கள். இப்போது தங்கள் மனம் மாறியிருக்கிறது. அதைப் பற்றிக் குற்றம் கூற யாருக்கும் பாத்தியதை இல்லை. தங்களுடைய உரிமையைத் தாங்கள் பகிரங்கமாகக் கோரலாம். சக்கரவர்த்தியிடமே தங்கள் விருப்பத்தைத் தெரியப்படுத்தலாம். அதை விடுத்து, கேவலம் காளாமுகக் கூட்டத்தாரின் ஆதரவைக் கோருவதற்காக அமாவாசை இருட்டில் தன்னந்தனியாகக் கொள்ளிடக் கரைக்குப் போக வேண்டிய அவசியமில்லை. அல்லது சம்புவரையர் மாளிகையில் அர்த்த ராத்திரியில் திருடர் கூட்டத்தைப் போல் கூட்டம் போட்டுச் சதிப் பேச்சுப் பேச வேண்டிய அவசியமும் இல்லை. இந்த மாதிரியெல்லாம் தங்களுக்கு யோசனை கூறுகிறவர்கள் தங்களுடைய பரம விரோதிகள் என்று



வைத்துக் கொள்ளுங்கள்!''

துராந்தகன் பெருங் குழப்பத்துக்கு உள்ளானான். முதன் மந்திரிக்கு இவ்வளவு விஷயங்களும் தெரிந்திருக்கின்றன என்று எண்ணியபோது அவனுக்கு உண்டான வியப்புக்கு அளவில்லை. அதே சமயத்தில் பீதி ஒரு பக்கமும், பீதி காரணமான ஆத்திரம் ஒரு பக்கமும் பெருகிக் கொண்டிருந்தன.

''ஐயா! தங்களுக்கு இவையெல்லாம் எப்படித் தெரிந்தது? எந்தத் துரோகி என்னுடனும் சிநேகமாயிருப்பது போல் நடித்துக் கொண்டு தங்களிடமும் வந்து சொல்லிக் கொண்டிருக்கிறான்?'' என்று கேட்டான்.

''தாங்கள் அதை அறிய முயல்வதில் பயனில்லை. இந்தப் பரந்த இராஜ்யமெங்கும் எனக்குக் கண்கள் இருக்கின்றன; காதுகளுமிருக்கின்றன. நான் அறியாமல் எதுவும் இந்நாட்டில் நடைபெற முடியாது......''

''அப்படியானால், சக்கரவர்த்திக்கும் இவையெல்லாம் தெரியுமா?'' என்று மதுராந்தகன் கேட்டான்.

''இல்லை; அவருக்குத் தெரியாது. என் கண்களும் காதுகளும் தெரிவிக்கும் எத்தனையோ இரகசியங்கள் என் நெஞ்சகத்தில் பதிந்து கிடக்கின்றன. அவசியமும் அவசரமும் நேர்ந்தால் ஒழிய அவை வெளியில் வரவே வரா......''

"ஆம், ஆம்; தங்களுடைய நெஞ்சகத்தில் எவ்வளவோ பயங்கரமான இரகசியங்கள் புதைந்து கிடக்கின்றன. அவை மட்டும் வெளியில் வந்தால், இந்தச் சோழ சாம்ராஜ்யமே நடுநடுங்கிப் போகாதா?" என்றான் மதுராந்தகன். அவனுடைய குரலில் இப்போது இதற்குமுன் இல்லாத கபடமும் வஞ்சகமும் தொனித்தன.

முதன் மந்திரி அதைக் கவனித்தும் கவனியாதவர் போல் கூறினார்: — "சக்கரவர்த்தி என்னுடைய ஆப்த நண்பர். ஆனால் அவர் அறியாத இரகசியங்களும் என் நெஞ்சில் இருக்கின்றன. சுந்தர சோழர் கொடிய நோய்வாய்ப்பட்டிருக்கிறார். பல காரணங்களினால் அவர் மனம் ஏற்கெனவே புண்ணாகியிருக்கிறது. சிற்றரசர்களின் சதிச் செயலைப் பற்றி அவரிடம் சொல்லி மேலும் அவர் நெஞ்சைப் புண்படுத்த நான் விரும்பவில்லை. அதற்கு அவசியமும் ஏற்படவில்லை. இளவரசே! தங்களுடைய காரியங்களைப் பற்றிய வரையில், நான் சக்கரவர்த்தியிடம் ஒரு நாளும் சொல்ல மாட்டேன் என்று தாங்கள் நம்பியிருக்கலாம்."

"ஐயா! அன்பில் அநிருத்தரே! இந்தப் பேதை மதுராந்தகன் பேரில் தங்களுக்குத் திடீரென்று இவ்வளவு அபிமானம் தோன்றக் காரணம்







வினு - ராஜையா



என்ன?'' என்று மதுராந்தகன் கேட்டு விட்டு ஏளனச் சிரிப்புச் சிரித்தான்.

''இளவரசே! தங்களிடம் திடீரென்று எனக்கு அபிமானம் பிறந்து விடவில்லை. சுந்தர சோழரின் புதல்வர்களைப் போலவேதான் தங்களிடமும் நான் எப்போதும் அபிமானம் வைத்து வந்திருக்கிறேன். அதைக் காட்டிக் கொள்வதற்கு இதற்கு முன்னால் சந்தர்ப்பம் ஏற்படவில்லை......''

''இன்றைக்கு அச்சந்தர்ப்பம் கிடைத்தது; நான் குதிரை மேலிருந்து விழுந்து காலை ஒடித்துக் கொண்டதால் ஏற்பட்டது. ஆனாலும் சில நாளைக்கு முன்னாலேயென்றால், என்னை அந்த மரத்தடியிலேயே கழுத்தை நெரித்துக் கொன்று விட்டு வந்திருப்பீர்......''

''நாராயணா! நாராயணா! இது என்ன வார்த்தை, இளவரசே!''

''ஐயா! எனக்கு ஒன்றும் தெரியாது என்று எண்ண வேண்டாம். எதைச் சொன்னாலும் நம்பக் கூடிய அப்பாவி என்று நினைக்க வேண்டாம். நான் என் தாயாரின் கர்ப்பத்தில் இருந்தபோதே எனக்கு எதிராக நீர் சதி செய்யத் தொடங்கினீர். நான் இந்தப் பூமியில் பிறந்ததும் என்னைக் கொன்று விடுவதற்கு ஏற்பாடு செய்திருந்தீர்... அதோ உம்முடைய முகத்தில் ஆச்சரியத்தின் அறிகுறியைக் காண்கிறேன். அதெல்லாம் எனக்கு எப்படித் தெரிந்தது என்று வியப்படைகிறீர், இல்லையா? இந்தச் சோழ நாட்டில் பயங்கர இரகசியங்கள் பலவற்றை அறிந்தவர் நீர் ஒருவர் தான் என்று எண்ணவேண்டாம்!''



நிருத்தரின் முகம் இப்போது உண்மையாகவே அதிசயமான காட்சி அளித்தது. அதில் கணத்துக்கு ஒரு சாயல் தோன்றி மறைந்தது. கடைசியில் வருந்தி வருவித்துக் கொண்ட புன்னகையுடன் முதன் மந்திரி, ''ஆம் இளவரசே! நான் அவ்விதம் இறுமாந்திருந்தது உண்மைதான். இன்றைக்குக் கர்வ பங்கமாயிற்று. தாங்கள் பிறந்தவுடனே சிசுஹத்தி செய்ய ஏற்பாடு நடந்திருக்கும் பட்சத்தில் தாங்கள் எப்படிப் பிழைத்தீர்கள்? அந்த இரகசியத்தையும் கூறிவிட்டால் கிருதார்த்தனாவேன்!'' என்றார்.

''எனக்கு எவ்வளவுதான் தெரியும் என்று சோதிக்கிறீர் போலும்! நல்லது; சொல்கிறேன், சிசுஹத்தி செய்வதற்குத் தாங்கள் ஏற்பாடு செய்திருந்தவர்கள் குழந்தை பிறந்ததும் ஆணா, பெண்ணா என்று கூடப் பாராமல் அவசரப்பட்டு எடுத்துக்

கொண்டு போனார்கள். பெண் குழந்தை என்று தெரிந்ததும் தங்களிடம் வந்து சொன்னார்கள். பிழைத்துப் போகட்டும் என்று அக்குழந்தையைக் கோயில் பட்டர் ஒருவரிடம் ஒப்புவித்து வளர்க்கச் சொன்னீர்கள். பெண் குழந்தை பிறந்த அரை நாழிகை நேரத்தில் நான் பிறந்தேன். அதை நீங்கள் எதிர்பார்க்கவேயில்லை. என்னுடைய ஜாதக பலமும் சரியாயிருந்தது. அதனால் நான் உயிர் பிழைத்தேன். தங்களுடைய திட்டம் தவறிப் போனது பற்றி அறிந்த பிறகும், என்னைச் சிம்மாசனம் ஏறவிடாமல் தடுப்பதற்குப் பல சூழ்ச்சிகள் செய்தீர்கள். என்னைச் சிவபக்தனாக அதாவது பைத்தியக்காரனாக வளர்ப்பதற்கு ஏற்பாடு செய்தீர்கள். அதிலும் தவறிப் போனீர்கள். நான் தாங்கள் விரும்பியது போல் அவ்வளவு முழுப் பைத்தியக்காரனாகி விடவில்லை! ஐயா! முதன் மந்திரியே! ஏன் இப்படி ஸ்தம்பித்துப் போய் உட்கார்ந்திருக்கிறீர்? இவையெல்லாம் உண்மையில்லையென்று ஒரேயடியாகச் சாதிப்பது தானே?''

முதன் மந்திரி உண்மையில் ஸ்தம்பித்துப் போய்த்தான் உட்கார்ந்திருந்தார். ஒருவாறு பேசும் சக்தியை வருவித்துக் கொண்டு, "இளவரசே! தங்களுக்கு இவ்வளவெல்லாம் விவரங்கள் தெரிந்திருக்கும் போது நான் இல்லையென்று சாதிக்கப் பார்ப்பதில் என்ன பயன்?'' என்றார்.

"ஆமாம்; பயனில்லைதான்! என்னிடம் திடீரென்று நீர் பரிவு கொண்டதன் காரணமும் எனக்குத் தெரியும். ஆதித்த கரிகாலனை உமக்குப் பிடிக்காது. அருள்மொழிவர்மனைச் சோழ நாட்டின் சிம்மாசனத்தில் ஏற்றி வைக்க எண்ணியிருந்தீர். அவனைக் கடல் கொண்டு விட்டதனால் இப்போது என்னிடம் பரிவு கொண்டிருக்கிறீர்! ஆனாலும் ஒன்று சொல்லுகிறேன். முன்னர் எனக்கு நீர் செய்த தீங்குகளையெல்லாம் மறந்து விடப் போகிறேன். இன்று நீர் எனக்குச் செய்த உதவிக்கு நன்றியும் செலுத்துவேன். இன்று முதல் நீர் என் கட்சியில் இருப்பதாகச் சொல்லும் பட்சத்தில், நான் சிம்மாசனம் ஏறியதும் உம்மையே முதன் மந்திரியாக வைத்துக் கொள்ளவும் விரும்புகிறேன்!'' என்றான் மதுராந்தகன்.

"இளவரசே! தங்களுடைய வார்த்தைகள் என்னைப் புளகாங்கிதம் அடையச் செய்கின்றன!'' என்றார் அன்பில் அநிருத்தப் பிரம்மராயர்.

## அத்தியாயம் 42

## சுரம் தெளிந்தது

நாகைப்பட்டினம் சூடாமணி விஹாரத்தில் ஆச்சாரிய பிக்ஷுவின் அறைக்குப் பக்கத்து அறையில் பொன்னியின் செல்வன் மரக்கட்டிலில் படுத்துக் கொண்டிருந்தான். மூன்று நாட்கள் அவனுக்குக் கடும் சுரம் அடித்துக் கொண்டிருந்தது; பெரும்பாலும், சுயப் பிரக்ஞையே இல்லாமலிருந்தது. இந்த நாட்களில் பிக்ஷுக்கள் அவனைக் கண்ணும் கருத்துமாகக் கவனித்துக் கொண்டு வந்தார்கள். வேளைக்கு வேளை மருந்து கொடுத்து வந்தார்கள். அடிக்கடி வாயில் தண்ணீர் ஊற்றிக் கொண்டு ஜாக்கிரதையாகப் பார்த்து வந்தார்கள்.

இடையிடையே எப்போதாவது சுய நினைவு தோன்றிய போது, தான் இருக்குமிடத்தைப் பற்றி அவன் எண்ணிப் பார்க்க முயன்றான். அவனுக்கு எதிரில் சுவரில் எழுதியிருந்த சித்திரக் காட்சி அவனுடைய கவனத்தைக் கவர்ந்தது. அந்தச் சித்திரத்தில் தேவர்கள், கந்தர்வர்கள், யக்ஷர்கள் காணப்பட்டார்கள். அவர்களில் சிலர் பலவித இன்னிசைக் கருவிகளை வைத்துக் கொண்டிருந்தார்கள். சிலர் வெண் சாமரங்களையும், வெண் கொற்றக் குடைகளையும் ஏந்திக் கொண்டிருந்தார்கள். மற்றும் சிலர்

கரங்களில் பல வண்ண மலர்கள் உள்ள தட்டுக்களை ஏந்திக் கொண்டிருந்தார்கள். இந்தக் காட்சி தத்ரூபமாக இருந்தது. தேவர்களின் உருவங்கள் எல்லாம், உயிர் உள்ள உருவங்களாகத் தோன்றின. அடிக்கடி அக் காட்சிகளைப் பார்த்த பிறகு பொன்னியின் செல்வன் வானவரின் நாட்டுக்குத் தான் வந்துவிட்டதாகவே எண்ணினான். அந்தத் தேவ யட்ச கின்னரர்கள் எல்லாரும் தன்னை வரவேற்க வருவதாகவும் எண்ணினான். சொர்க்க லோகத்துக்குத் தான் வந்து சேர்ந்தது எப்படி என்று யோசித்தான். அடர்த்தியான தாழைப் புதர்களும், அத்தாழைப் புதர்களில் பூத்திருந்த தங்கநிறத் தாழம்பூக்களும் இருபுறமும் நிறைந்திருந்த ஓடையின் வழியாக வான நாட்டுக்குத் தான் வந்திருக்க வேண்டும் என்று தோன்றியது. அந்த ஓடை வழி நினைவு வந்த போது தாழம்பூக்களிலிருந்து வந்த நறுமணத்தையும் அவன் நுகர்வதாகத் தோன்றியது. ஓடையில் ஒரு படகில் ஏற்றித் தன்னை ஒரு தேவகுமாரனும் தேவகுமாரியும் அழைத்து வந்ததும் இலேசாக நினைவு வந்தது. தேவகுமாரன் சிவபக்தன் போலிருக்கிறது. இனிமையான தேவாரப் பாடல்களை அவன் அடிக்கடி பாடினான். தேவகுமாரி என்ன செய்தாள்? அவள் பாடவில்லை. அவள் அவ்வப்போது இரண்டொரு வார்த்தைகளை மட்டுமே கூறினாள். அதுவே தேவகானம் போலிருந்தது. ஆர்வமும் அன்பும் நிறைந்த கண்களால் தன்னை அடிக்கடி பார்த்துக் கொண்டிருந்தாள். அவ்விருவரும் இப்போது எங்கே?

வானவர் நாட்டில் தேவர்கள், யக்ஷர்கள், கின்னரர்களைத் தவிர, புத்த பிக்ஷுக்களுக்கும் முக்கியமாக இடம் உண்டு போலும்! அவர்கள் தான் தேவ லோகத்து அமுத கலசத்தைப் பாதுகாக்கிறவர்கள் போலும்! அடிக்கடி புத்த பிக்ஷு ஒருவர் அவனை நெருங்கி வருகிறார். அவனுடைய வாயில் சிறிது அமுதத்தை ஊற்றிவிட்டுப் போகிறார். தேவலோகத்தில் மற்ற வசதிகள் எவ்வளவு இருந்தாலும், தாகம் மட்டும் அதிகமாகவே இருக்கிறது. இன்னும் கொஞ்சம் அதிகமாகவே இந்தப் புத்த பிக்ஷு தன் வாயில் அமுதத்தை ஊற்றி விட்டுப் போகக் கூடாதோ? தேவலோகத்தில் கூட ஏன் இந்தத் தரித்திர புத்தி!

ஒரு வேளை அமுதத்தை ஒரேயடியாக அதிகமாய் அருந்தக் கூடாது போலும்! இது அமுதமா? அல்லது ஒரு வேளை ஏதேனும் மதுபானமா? — சீச்சீ! பிக்ஷுக்கள் கேவலம் மதுவைக் கையினாலும் தொடுவார்களா? தன் வாயிலேதான் கொண்டு வந்து ஊற்றுவார்களா? இல்லையென்றால், ஏன் இப்படித் தனக்கு மயக்கம் வருகிறது? அமுத பானம் செய்த சிறிது நேரத்துக்கெல்லாம் ஏன் நினைவு குன்றுகிறது?......

ன்று தினங்கள் இவ்வாறு பொன்னியின் செல்வன் வானவர் உலகத்திலும் நினைவேயில்லாத சூனிய உலகத்திலும் மாறி மாறிக் காலம் கழித்த பிறகு, நாலாம் நாள் காலையில் தூக்கத்திலிருந்து விழித்தெழுவது போல் எழுந்து, பூரண சுய நினைவு பெற்றான். உடம்பு பலவீனமாய்த்தானிருந்தது; ஆனால் உள்ளம் தெளிவாக இருந்தது. எதிரே சுவரில் இருந்த உருவங்கள் சித்திர உருவங்கள் என்பதை அறிந்தான். அந்தத் தேவ யக்ஷகின்னரர்கள் தன்னை வரவேற்பதற்காக அங்கே நிற்கவில்லையென்றும், தேவலோகத்துக்கு விஜயம் செய்த பகவான் புத்தரை வரவேற்கிறார்கள் என்றும் அறிந்தான். மற்றொரு சுவரில் மேகங்கள் சூழ்ந்த வான வெளியில் புத்த பகவான் ஏறி வருவது போன்ற சித்திரம் எழுதியிருந்ததையும் கண்டான். புத்த விஹாரம் ஒன்றில் தான் படுத்திருக்கிறதை அறிந்து கொண்டான். எங்கே, எந்தப் புத்த விஹாரத்தில் என்று சிந்தித்த போது, இலங்கையிலிருந்து தான் பிரயாணம் தொடங்கியதிலிருந்து நிகழ்ந்த சம்பவங்கள் எல்லாம் ஒவ்வொன்றாக நினைவு வந்தன. வந்தியத்தேவனும் தானும் அலைமோதிய கடலில் அலைப்புண்டு அலைப்புண்டு கை சளைத்துப் போனது வரையில் ஞாபகம் வந்தது. அப்புறம் ஒரே குழப்பமாக இருந்தது.

அச்சமயம் புத்த பிக்ஷு ஒருவர் அந்த அறைக்குள் வந்தார். வழக்கம் போல் கையில் அமிர்த கிண்ணத்துடன் வந்தார்! இளவரசன் அருகில் வந்ததும் பிக்ஷு அவனை உற்றுப் பார்த்தார். இளவரசன் கையை நீட்டிக் கிண்ணத்தை வாங்கி அதில் இருப்பது என்னவென்று பார்த்தான். அது தேவலோகத்து அமுதம் இல்லையென்று உறுதிப்படுத்திக் கொண்டான். மருந்து அல்லது மருந்து கலந்த பால் என்று தெரிந்து கொண்டான். பிக்ஷுவை நோக்கி, "சுவாமி! இது என்ன இடம்? தாங்கள் யார்? எத்தனை நாளாக நான் இங்கே இப்படிப் படுத்திருக்கிறேன்?" என்று கேட்டான்.

பிக்ஷு அதற்கு ஒன்றும் மறுமொழி சொல்லாமல் திரும்பிச் சென்றார். அடுத்த அறைக்கு அவர் சென்று "ஆச்சாரியாரே! சுரம் நன்றாய்த் தெளிந்து விட்டது. நினைவு பூரணமாக வந்து விட்டது!" என்று கூறியது இளவரசன் காதில் விழுந்தது.

சிறிது நேரத்துக்கெல்லாம் வயது முதிர்ந்த பிக்ஷு ஒருவர் பொன்னியின் செல்வன் இருந்த அறைக்குள் வந்தார். கட்டிலின் அருகில் வந்து அவரும் இளவரசனை உற்றுப் பார்த்தார். பிறகு மலர்ந்த முகத்துடன், "பொன்னியின் செல்வ! தாங்கள் இருக்குமிடம் நாகைப்பட்டினம் சூடாமணி விஹாரம். கடுமையான தாபஜ் ஜுரத்துடன் தாங்கள் இங்கே வந்து மூன்று தினங்கள் ஆயின. தங்களுக்கு இந்தச் சேவை செய்வதற்குக் கொடுத்து வைத்திருந்தோம். நாங்கள் பாக்கியசாலிகள்!" என்றார்.

"நானும் பாக்கியசாலிதான். இந்தச் சூடாமணி விஹாரத்துக்கு வந்து பார்க்க வேண்டுமென்று ஆவல் கொண்டிருந்தேன். எப்போதோ ஒரு சமயம் இந்த நகரின் துறைமுகத்துக்குப் போகும்போது வெளியிலிருந்து பார்த்திருக்கிறேன். தெய்வாதீனமாக இங்கேயே நான் வந்து தங்கியிருக்கும்படி நேர்ந்தது. சுவாமி! எப்படி நான் இங்கு வந்து சேர்ந்தேன்? சொல்ல முடியுமா?" என்று அருள்மொழிவர்மன் கேட்டான்.

"இளவரசே! முதலில் தங்களுடைய கையில் உள்ள மருந்தைச் சாப்பிடுங்கள், எனக்குத் தெரிந்த விவரங்களைச் சொல்கிறேன்!" என்றார் பிக்ஷு.

இளவரசன் மருந்தைச் சாப்பிட்டு விட்டு, "ஐயா! இது மருந்து அல்ல; தேவாமிர்தம். என் விஷயத்தில் தாங்கள் எவ்வளவோ சிரத்தையுடன் கவலை எடுத்துச் சிகிச்சை செய்வித்திருக்கிறீர்கள். ஆனால் இதற்காகத் தங்களுக்கு நான் நன்றி செலுத்தப் போவதில்லை!" என்றான்.

ஆச்சாரியபிக்ஷு புன்னகைபுரிந்து, "இளவரசே! தாங்கள் நன்றி செலுத்த வேண்டிய அவசியமும் இல்லை. நோயாளிகளுக்குச் சிகிச்சை செய்வது பரமோத்தம தர்மம் என்று புத்த பகவான் அருளியிருக்கிறார். நோய்ப்பட்ட பிராணிகளுக்குக்கூடச்சிகிச்சை செய்யும்படி புத்த தர்மம் கட்டளையிடுகிறது. தங்களுக்குச் சிகிச்சை செய்ததில் அதிக விசேஷம் ஒன்றுமில்லை. சோழ குலத்துக்கு நாங்கள் மிகவும் கடமைப்பட்டவர்கள். தங்கள் தந்தையார் சுந்தர சோழ சக்கரவர்த்தியும் தங்கள் திருத்தமக்கையார் இளைய பிராட்டியும் புத்த தர்மத்துக்கு எவ்வளவோ ஆதரவு அளித்திருக்கிறார்கள். தாங்கள் இலங்கை அநுராதபுரத்தில் புத்த விஹாரங்களைப் புதுப்பித்துக் கட்ட ஏற்பாடு செய்ததும் எங்களுக்குத் தெரிந்ததே! அப்படியிருக்கும் போது, நாங்கள் செய்த இந்தச் சிறிய உதவிக்காகத் தங்களிடம் நன்றி எதிர்பார்க்கவில்லை..."

"ஆச்சாரியரே! நன்றி செலுத்துவது பற்றி அந்த முறையில் நான் கூறவில்லை. எனக்கு எப்பேர்ப்பட்ட கடும் ஜுரம் வந்திருக்க வேண்டும் என்பதை நான் உணர்ந்திருக்கிறேன். இலங்கையில் இந்த ஜுரத்தினால் பீடிக்கப்பட்டவர்களின் கதியை நான் பார்த்திருக்கிறேன். நியாயமாக இதற்குள் நான் வானவர் உலகத்துக்குப் போயிருக்க வேண்டும். அங்கே தேவர்கள், யக்ஷர்கள், கின்னரர்கள் என்னை வரவேற்று உபசரித்திருக்கக் கூடும் அல்லவா? இன்று தேவர் — தேவியர்க

"தினமும் மூணு வேளை கேரமில்க் கொடுங்க, சரியாயிடும்!"

Parry's

கேரமில்க்

CARAMILK

"குழந்தைகளே... இன்னிக்கு கேரமில்க் சாப்பிட்டீங்களா!"





PARRY'S

பாரியின் தரமான தயாரிப்புகள்

கோமில்க் · சாக்லேட் எக்லேர்ஸ் · டொஃபி
கோகனட் கிரீம் · சாக்லேர்ஸ் · லால்லிபாப்ஸ் · காஃபி பைட்




HTA 7077

என்ன நீலு சார்,
நீங்க ஏன் எப்போதுமே
"பிஸ்லேரி கிளப் சோடா"வையே
குடிக்கிறீங்க.'



சோடான்னா, தண்ணீரும் கார்பன்-டை-ஆக்ஸைடும் சேர்ந்து தயாரிக்கிறது மட்டுமில்லே. சோடா பாட்டிலும் சுத்தமாக இருக்கவேண்டும். சென்னை பாட்லிங் கம்பெனியில் EBI – அதாவது எலக்ட்ரானிக் இயந்திரம் கவனிப்பில் பாட்டில்கள் நிறைக்கப்படுகிறது. துளி அழுக்கு, தூசி இருந்தாலும் பாட்டில்கள் வெளிதள்ளப்படும். அதை நானே நேரில் பார்த்தேன். ஆகவே "பிஸ்லேரி கிளப் சோடா" மிகவும் சுத்தமாக தயாரிக்கப்படுகிறது. அதனாலே தான் "பிஸ்லேரி கிளப் சோடாவை" நான் எப்பொழுதும் விரும்பி குடிக்கிறேன்.




**"Bisleri CLUB Soda"**

தயாரிப்பாளர் :

சென்னை பாட்லிங் கம்பெனி லிட்.
423, பூந்தமல்லி நெடுஞ்சாலை
சென்னை — 600 106.
தொ.பே. 420440, 420755, 425150.

200 கோடி ரூபாய்
புழக்கமுள்ள சக்தி குழுவின்
ஓர் அங்கம்.

ளுக்கு மத்தியில் உண்மையாகவே அமிர்தபானம் செய்து கொண்டு ஆனந்த மயமாய் இருப்பேன் அல்லவா? அதைத் தாங்கள் கெடுத்து விட்டீர்கள்! வானுலகத்தின் வாசல் வரையில் சென்ற என்னைத் திரும்ப இந்தத் துன்பம் நிறைந்த மண்ணுலகத்துக்குக் கொண்டு வந்து விட்டீர்கள். ஆதலின் எனக்குத் தாங்கள் நன்மைசெய்த தாகவே நான் எண்ணவில்லை. ஆகையால்தான் தங்களுக்கு நன்றி செலுத்தப் போவதில்லை என்று கூறினேன்!''

ஆச்சாரியபிக்ஷுவின் முகம் ஆனந்த பூரிப்பினால் மலர்ந்தது.

''பொன்னியின் செல்வ! தாங்கள் வானுலகத்துக்குப் போக வேண்டிய காலம் வரும்போது தேவேந்திரனும் பிற தேவர்களும் விமானங்களில் வந்து தேவ துந்துபிகள் முழங்கி மலர் மாரி பொழிந்து தங்களை அழைத்துச் செல்வார்கள். ஆனால் அந்தக் காலம் இன்னும் நெடுந்தூரத்தில் இருக்கிறது. இந்த மண்ணுலகத்தில் தாங்கள் செய்ய வேண்டிய அரும்பெரும் காரியங்கள் எத்தனையோ இருக்கின்றன! அவற்றை முடித்துவிட்டல்லவா வானுலகம் செல்வது பற்றி யோசிக்க வேண்டும்?'' என்றார்.



துகாறும் சாய்ந்து படுத்திருந்த பொன்னியின் செல்வன் நிமிர்ந்து உட்கார்ந்தான். அவனுடைய திருமுகத்தில் அபூர்வமான களை பொலிந்தது. அவனுடைய விசாலமான நயனங்களிலிருந்து மின் வெட்டுப் போன்ற ஒளிக் கிரணங்கள் அலை அலையாகக் கிளம்பி அந்த அறையையே ஜோதி மயமாகச் செய்தது.

''ஆச்சாரியரே! தாங்கள் கூறுவது உண்மை. இந்த மண்ணுலகில் நான் சில காரியங்களைச் சாதிக்க விரும்புகிறேன். அரும்பெரும் பணிகள் பல செய்து முடிக்க விரும்புகிறேன். இந்தச் சூடாமணி விஹாரத்தை ஒரு சமயம் வெளியிலிருந்து பார்த்தேன். அநுராதபுரத்திலுள்ள ஸ்தூபங்களையும் விஹாரங்களையும் பார்த்தேன். அங்கேயுள்ள அபயகிரி விஹாரத்தைப் போல் பெரிதாக இந்தச் சூடாமணி விஹாரத்தைப் புனர் நிர்மாணம் செய்யப் போகிறேன். அநுராதபுரத்தில் உள்ள பெரிய பெரிய புத்தர் சிலைகளைப் போன்ற சிலைகளை இந்த விஹாரத்திலும் அமைத்துப் பார்க்கப் போகிறேன். இன்னும், இந்தச் சோழநாட்டிலுள்ள சிவாலயங்களை அம்மாதிரி புதுப்பித்துக் கட்டப் போகிறேன். இலங்கையிலுள்ள ஸ்தூபங்களையும் விஹாரங்களையும் பார்த்துவிட்டு இச்சோழநாட்டிலுள்ள ஆலயங்களையும் நினைத்துப் பார்த்தால், எனக்கு உடலும் உள்ளமும் குன்றுகின்றன. வானளாவும் கோபுரத்தை உடைய மாபெரும் ஆலயத்தைத் தஞ்சாவூரில் நிர்மாணிக்கப் போகிறேன். அதற்குத் தகுந்த அளவில் மகாதேவருடைய சிலையைச் செய்து நிர்மாணிக்கப் போகிறேன். ஆச்சாரியரே! இந்தச் சோழ நன்னாட்டில் புத்த ஸ்தூபங்களும் சிவாலயங்களின் கோபுரங்களும் ஒன்றோடொன்று போட்டியிட்டு மேக மண்டலத்தை எட்டப் போகின்றன. ஆயிரமாயிரம் வருஷங்களுக்குப் பிறகு இந்தத் தெய்வத் தமிழ் நாட்டில் பிறக்கும் சந்ததிகள் அவற்றைக் கண்டு பிரமித்து நிற்கப் போகிறார்கள்!......''

இவ்வாறு ஆவேசம் கொண்டவன் போல் பேசி வந்த இளவரசன் உடலில் போதிய பலமில்லாமையால் கட்டிலில் சாய்ந்தான். உடனே ஆச்சாரிய பிக்ஷு அவனுடைய தோள்களைப் பிடித்துக் கொண்டு, கட்டிலில் தலை அடிபடாமல் மெள்ள மெள்ள அவனைப் படுக்க வைத்தார். நெற்றியில் கையினால் தடவிக் கொடுத்து, ''இளவரசே! தாங்கள் உத்தேசித்த அரும் பெரும் காரியங்களையெல்லாம் காலா காலத்தில் செய்து முடிப்பீர்கள். முதலில், உடம்பு பூரணமாய்க் குணமடைய வேண்டும். சற்று அமைதியாயிருங்கள்!'' என்றார்.

(தொடரும்)

# ஆதாரம்



ஆர்.கே.பத்மா

மலைக்கோட்டை எக்ஸ்பிரஸ் கிளம்பு வதற்கு ஒரு நிமிஷம் இருந்த போது அந்தக் குடும்பம் அவசரமாக வண்டியில் ஏறியது. கணவன், மனைவி, இரண்டு சிறுவர்கள், கையில் சிணுங்கிக் கொண்டு ஒரு பெண் குழந்தை.

மேல் 'பர்த்தை' துண்டு விரித்துப் பிடித் துப் படுத்திருந்த பாண்டியன், சோம்ப லோடு கண்ணை இறுக மூடிக் கொண்டான்.

"அப்படி ஓரமா பெஞ்சில உக்காரு புள்ளே" என்றான் வண்டிக்குள் ஏறிய கண வன். அவன் மனைவியின் நீலச் சின்னாளம் பட்டி மினுமினுத்தது. பின்னணி இசை மாதிரி கைக் குழந்தை அழ ஆரம்பித்தது.

"ப்ச... கொஞ்சம் சீக்கிரம் வந்து இடம் பார்த்து உட்காரக் கூடாது? ஏற்கெனவே எட்டு பேரு உக்காந்திருக்கோம் பெஞ்சில. ஒர ஸீட் அம்மாள் சிடுசிடுத்தாள்.

"உன்னை அப்பவே புடிச்சு கிளம்புமன் னேன். பேசிகிட்டே நின்னுட்டே... இப்பப் பாரு ...ால் படறதை!" — கணவனின் எரிச்ச... குரல் தொடர்ந்தது.

"ஆமா.... என்னைச் சொல்றாரு. நீங்க ரஹீம் பாயோட மார்க்கெட்டுக்குப் போயிட் டுச் சீக்கிரம் வந்திருக்கலாமில்ல. நீங்க வரும் போதே ஏழுமரை!" — மனைவி பட்டென்று வெடிக்க, குழந்தையின் சத்தம் பெரிதாகி யது. ஏறக்குறைய அலற ஆரம்பித்தது.

"சரி சரி... புள்ளையக் கவனி."

குழந்தைகளின் அழுகைச் சத்தமும், பீடிப் புகையும் ரயில் பயணத்தின் சாபம் என்று தோன்றியது பாண்டியனுக்கு. அதுவும் அவன் பரீட்சை ரிஸல்ட் பார்த்ததிலிருந்து மனம் நொந்து போய் இருந்தான். இந்தச் சின்ன அசௌகரியங்கள் பெரிய அளவில் எரிச்சலைக் கிளப்பின.

பொன்மலை தாண்டியதை டிஸ்டில்லரீஸ் மணம் சொன்னது. பையன்களில் ஒன்று "அம்மா தண்ணி" என்று நச்சரிக்க ஆரம் பித்து, பாட்டில் தண்ணீரைக் கீழேயும், பக்கத்திலேயும் சிந்தி, அடி வாங்கியது.

ஒரே ஒரு பேப்பரில் பாண்டியனை பெயிலாக்கி விட்டார்கள். கடைசி வருஷம், கடைசி செமஸ்டர். புரொபஸர் தங்கராஜை முறைத்துக் கொண்டதன் விளைவுதான் இது என்று பாண்டியனுக்கு நன்றாகப் புரிந் தது. ஹாஸ்டல் விஷயம். நண்பனுக்காகப் பேசி, கெட்ட பெயர் வாங்கியதும், பெயிலா னதும்தான் மிச்சம். ரிஸல்ட் தெரிந்தால் அப்பா இடிந்து போய் விடுவார் என்று தோன்றியது. அதிலும் அம்மா நிச்சயம் அதிர்ந்து போவாள். அப்பா அவனுக்காக மண்ணடியில் ஏதோ கம்பெனியில் அப்ரன்டிஸ் வேலைக்கு ஏற்பாடெல்லாம் கூடச் செய்திருந்தார்.

சில பேர் தஞ்சாவூர் பேரணி பற்றியும், சிலர் ஒலிம்பிக்ஸ் பற்றியும் பேசிக் கொண் டிருக்க, நீலப் புடைவைக்காரி இரும ஆரம் பித்தாள்.

"சீக்காளியாட்டம் இருமு. ஸ்வெட்டர் போட்டுகினு வரக் கூடாது?" 'கணவன் எரிச்சலுடன் சொன்னான்.

"ஆமா... நஞ்சு போனதும், கிழிஞ்சு போனதும் ரயில்ல போட்டுகிட்டு வரணு மாக்கும்!" — என்றாள் அவள். இப்பொழுது





"அதோ போறாரே அந்த ஆள் ஒரு பெரிய வீடு செட்அப் பண்ணியிருக்கார்."

"புரியலே... சின்ன வீடுன்னுதான் நான் கேள்விப்பட்டிருக்கேன்!"

"அதாவது சம்சாரத்தைவிட இந்த அம்மா ஐந்தாறு வயசு பெரியவங்களாம்...!"

— அ. தெய்வசிகாமணி.

---

கணவனால் பேச முடியவில்லை.

பாண்டியன் ஒருக்களித்துப் படுத்துக் கொண்டு அந்தக் கணவனின் பரிதாபமான முகத்தைப் பார்த்தான்.

"ஆட்டம் போடாதடா. சும்மா உக்காரு!" — அவன் மடி மீது உட்கார்ந்திருந்த பிள்ளையிடம் கத்துவதன் மூலம் தன் எரிச்சலைத் தணித்துக் கொண்டிருந்தான்.

**வ**றுமை என்பது கொடுமை என்றால் வசதிக் குறைவு என்பது இன்னொரு விதமான கொடுமை என்று பட்டது. அப்பாவுக்கு அடுத்த வருஷம் வேலையில் ஓய்வு கிடைத்து விடும். அரசாங்க வேலை. நான் பார்த்து வீட்டுக்கு அனுப்பி விடுவான். அதற்குள் அவன் தனக்கென்று ஒரு வேலையைத் தேடிக் கொள்ள வேண்டும். இல்லாவிட்டால் அமனிதான். இப்பொழுதே இழுபறியில்தான் குடும்பம் ஓடிக் கொண்டிருக்கிறது. தன் வயிற்றில் ஏகமாய் அமிலம் சுரப்பதை உணர்ந்து அவன் யோசனையை நிறுத்திக் கொண்டான்.

"நாளைக்கு ரேஷன் வாங்கக் கடைசி நாள்" என்றாள் நீலப்புடைவை பெண்மணி. கைக் குழந்தையை நடக்கும் பாதையில், ஜமுக்காளத் துண்டு விரிப்பில் கிடத்தியிருந்தாள். பக்கத்தில் சிறிய பையனும் சுருண்டிருந்தான்.

"ரஹீம்பாய் இருபத்தியஞ்சு ரூவா கடன் குடுத்தாரு.... அரிசி மட்டும் வாங்கிடு. சீமெண்ணை அடுத்த மாசம் பாத்துக்குவோம்."

மற்ற பேச்சுக்களை மீறி பாண்டியனின் மனம் அந்தக் குடும்பத்திடம் லயித்தது.

"சீமெண்ணை இல்லாட்டி அடுப்பு எரியுமா?" நீலப் புடைவை இன்னொரு பிரச்னையை ஞாபகப்படுத்தினாள்.

"அவசரத்துக்கு அஞ்சுகத்தக் கேட்டுக்க. அடுத்த மாசம் திருப்பிடுவோம்." கணவனிடம் எல்லாப் பிரச்னைக்குமே ஒரு தீர்வு இருந்தது.

பிரச்னைகள்! வருமானம் பற்றாததால் பிரச்னைகள்; குடும்பம் பெரிதாய் இருந்தால் இன்னும் பிரச்னைகள். ஐந்து ஜீவன்களைப் பராமரிக்கும் சம்பாத்தியம் அந்தக் கணவனுக்கு இருக்குமா என்று சந்தேகமாக இருந்தது.

அந்தப் பெண், 'கல்யாண வீட்டில் பெண்ணுக்கு நிறைய சீர் செய்திருந்தார்கள்' என்று குறிப்பிட்டாள்.

"அண்ணாத்த ஆசையாத்தான் பொண்ணை வளத்தாரு" என்றான்.

அண்ணாத்தை என்பவர்தான் அவர்கள் திருச்சிக்கு வந்து போக டிக்கெட் எடுத்துக் கொடுத்திருக்கிறார் என்று அவர்கள் உரையாடல் மூலம் புரிந்தது. ரஹீம்பாய் என்பவரிடம் இருபத்தி ஐந்து ரூபாய்க் கடன் வேறு! எப்போது திருப்புவான் இந்த ஆள்? அல்லது எப்படி?

பாண்டியன் அசதியுடன் கண்ணை மூடிக் கொண்டான். 'கல்யாணம் கூடாது' — மனத்துக்குள் சொல்லிக் கொண்டான். 'குடும்பமே கூடாது!' கண்ணயர்ந்து விட்டான்.

**வி**ழித்த போது விருத்தாசலம் நெருங்கிக் கொண்டிருந்தது. அந்தக் குடும்பம் இறங்கத் தயாராகிக் கொண்டிருந்தது. பாண்டியன் மெல்லக் கீழே இறங்கினான். நீலப் புடைவையின் எதிர் சீட்டில் உட்கார்ந்தான்.

"மழை வர மாதிரி இருக்கு" அவள் தலை மயிரைச் சரி செய்து கொண்டாள். கணவனைப் பார்த்துச் சிரித்தாள்.

"ஒண்ணும் வராது. குவார்ட்டர்ஸ் வழியாப் போயிடுவோம்" என்று சொன்னபடி கணவன் கைப்பையையும், உறங்கிக் கொண்டிருந்த மகளையும் தூக்கிக் கொண்டான். பிள்ளைகளை எழுப்பி அம்மாவின் கையைப் பிடித்துக் கொள்ளச் சொன்னான்.

கதவுக்கருகில் நின்று கொண்டார்கள்.

"சில்லுனு காத்தடிக்குது" என்றபடி மனைவியைப் பார்த்தவனின் கண்களில் பரிவு பொங்கியது. "அடுத்த மாசம் உனக்கு மொதல்ல ஸ்வெட்டரு ஒண்ணு வாங்கிடுவோம்."

நீலப் புடைவையின் கண்ணில் அவநம்பிக்கை துளியும் இல்லை!

பாண்டியனுக்குச் சிலிர்த்தது. இந்த மாசம் முடியாதது அடுத்த மாசம், இந்த வருஷம் முடியாதது அடுத்த வருஷம்... எதுதான் முடியாது மனது வைத்தால்? அவனுக்குள் ஒரு பரவசம் தளும்பிற்று.

அந்தக் குடும்பத் தலைவன் வண்டியிலிருந்து இறங்கி, பிள்ளைகளும் மனைவியும் இறங்குவதற்குக் கைநீட்டி உதவிக் கொண்டிருந்தான்.

# நீரில் மிதக்கும்

11



"என்னது?" என்று கேட்டான் பிருத்விராஜ்.

"அந்தக் கதைய அப்புறம் சொல்றேன்" என்று ஸ்ரீநாத் சிகரெட்டை ஆழமாக உறிஞ்சினான். பர்ஸை மடித்துப் பாக்கெட்டில் வைத்துக் கொண்டான்.

ரயில் சென்ட்ரலை அடைந்த போது அரைமணி நேரம் லேட்.

ஷில்பாவை அவசரப்படுத்தி, ஜூபிடர் ரத்தினம் ஒரு ஆட்டோவில் அவளைத் திணிக்க, ஷில்பா, பிருத்விராஜைக் கடைசி வினாடியில் பார்த்துக் கையசைத்தாள்.

ஸ்ரீநாத் ரயிலில் இருந்து இறங்கியவுடன் போனை நாடிப் போய் விட்டான்.

பிருத்விராஜ் ஸ்டேஷனில் இருந்து வெளிப்பட்டான். வழி மறித்த ஆட்டோ டிரைவர்களை விலக்கிக் கொண்டு பஸ் ஸ்டாண்டிற்கு வருவதற்கு அவனுக்குப் பத்து நிமிடங்கள் பிடித்தன.

சென்ட்ரல் ஸ்டேஷனின் மணிக்கூண்டை நிமிர்ந்து பார்த்தான்.

பத்தரை!

இந்நேரம் அவன் தங்கியிருந்த காலனியின் கேட்டைப் பூட்டியிருப்பார்கள். எகிறிக் குதிக்க வேண்டியதுதான். போய்ச் சேர பதினொன்றரை ஆகிவிடும்.

பசித்தது. ரயிலில் வரும் போது கதையில் மூழ்கி இருந்ததில், மதுமதியின் நினைவில் மூழ்கி இருந்ததில், ஷில்பாவின் அருகாமையில் இருந்ததில், பசி தெரியவில்லை. இப்போது தெரிந்தது. பாக்கெட்டில் ஒரு இருபது ருபாயோ என்னவோ இருந்தது. சாப்பிடலாம். இன்னும் நேரமாகி விட்டால் என்ன செய்வது என்று நினைத்துக் கொண்டிருந்த நேரத்தில், அவனை உரசிக் கொண்டு ஒரு ஹெரால்டு வந்து நின்றது.

ஹெரால்டின் ஜன்னலில் ஸ்ரீநாத்தின் முகம் தெரிந்தது.

"ஹலோ பிருத்வி.. இன்னுமா பஸ் கெடைக்கலை... கம்மான் கம்மான் ஹாப் இன்... நான் உன்னை ட்ராப் பண்ணிடறேன்."

பிருத்விராஜ் தயங்கினான். அதற்குள் ஸ்ரீநாத் கீழே இறங்கிக் கதவைத் திறந்து பிருத்விராஜை ஏறக்குறைய காருக்குள் திணித்தான்.

பிருத்விராஜ் அப்போதுதான் டிரைவிங் சீட்டில் இருந்தவளைப் பார்த்தான்.

"ஷீ ஈஸ் புனிதா... புனிதவல்லி... ட்ரெய்ன்ல வரும் போது நான் சொல்லிட்டு

சுபா



வரலை.... என் தங்கை....''

''தங்கையா?'' என்றான் பிருத்விராஜ் அதிர்ந்துபோய்.

''யெஸ்... ஏன்?''

''என் புனிதான்னு சொன்னீங்கல்ல... நான் தப்பாப் புரிஞ்சிக்கிட்டேன்.''

ஸ்ரீநாத் கண்ணாடியை ஒற்றை விரலால் மேலேற்றிக் கொண்டு ஒருமுறை சிரித்தான். புனிதா டிரைவிங் சீட்டில் உட்கார்ந்தபடியே திரும்பி இரண்டு கைகளையும் கூப்பினாள்.

பிருத்விராஜ் தர்மசங்கடமாக உணர்ந்து கையை உயர்த்திக் கும்பிட்டான்.

புனிதா கிளம்புவதற்குச் சற்று முன்தான் குளித்து வந்தாற் போல் தெரிந்தாள். ஷாம்பூக் குளியல். முடி அப்படியே நீளமாக ஒரு தோளில் கறுப்பாக இறங்கி இருக்க, அவளுடைய மஜந்தா நிறச் சேலையில் முடி இறங்கியது தனி அழகுடன் தெரிந்தது. வட்டமாக் ஒரு பொட்டு வைத்திருந்தாள் – கறுப்பு நிறத்தில். கண்களைச் சுற்றி ஐலைனரால் தீற்றி இருந்தாள். இடது பக்க மூக்கு குத்தப்பட்டு, ஒரு கல்லுடன் மூக்குத்தி. வைரமோ என்னவோ. பளிச்சென்று ஒரு கோணத்தில் வேறு வேறு நிறக் கதிர்களை வெளிப்படுத்தியது. சற்றுப் பெரிய கண்கள்.

''உன் வீடு எங்கம்மா?'' என்று கேட்டான் ஸ்ரீநாத்.

''வீடு இல்லை; ரூம்தான். ட்ரிப்ளிகேன்ல. என்னைக் கண்ணகி சிலை கிட்ட இறக்கி விட்டுடுங்க.''

''சாப்ட்டியா பிருத்வி?'' என்று திடீரென நினைவிற்கு வந்த மாதிரி கேட்டான் ஸ்ரீநாத். ''சாப்ட்டிருக்க மாட்டே... வா... நம்ப வீட்டுக்கே போயிடலாம். சாப்ட்டு நைட் அங்கேயே தூங்கிட்டுக் காலையில உன் ரூமுக்கு வந்துக்க.''






தலைவர்: ''உங்கள் பத்திரிகை விரைந்து செய்திகளை வெளியிடலாம்... அதற்காக நேற்று நான் புதுக்கட்சி ஆரம்பித்தேன் என்ற செய்தியை 'நேற்று என் கட்சி இரண்டாக உடைந்தது' என்று போட்டிருப்பது அவ்வளவு நன்றாக இல்லை....!''

— ஏ. ஆர். வீரராகவன்.

---

''இல்ல... இல்ல... வேண்டாம்... வேண்டாம்!''

''நீ என்ன சொல்றே புனிதா?''

''பூரி, மசால், பால் நெறையவே இருக்கு. அவர் வர்றதில எனக்கொண்ணும் கஷ்டம் இல்ல....''

''அப்ப என்ன, விடு சவாரி!''

**ஸ்ரீ**நாத்தின் வீடு பங்களா என்று சொல்லக்கூடிய தகுதியைப் பெற்றிருந்தது. கார் உள்ளே நுழைந்து, வீட்டுக்குப் பின்னால் இருந்த ஒரு ஷெட்டில் இருந்த சில மரப் பெட்டிகளுக்கு இடையே இடம் பிடித்து நின்றவுடன், அவர்கள் கீழிறங்கினார்கள்.

வீட்டுக்குள் நுழைந்தார்கள். ஸ்ரீநாத் ''வெல்கம் டு அவர் ஹோம்'' என்று ஏர்–இந்தியா மகாராஜா போல் ஒருமுறை குனிந்து நிமிர்ந்தான். புனிதாவும் ஸ்ரீநாத் மாதிரியே ஒருமுறை குனிந்து நிமிர்ந்தாள்.

''இதான் எங்க வீட்டு கெஸ்ட் ரூம்... இனிமே இது உன் ரூம்.. குளிக்கறதுன்னா குளி. பல் தேய்க்கறதுன்னா தேய்... என்ன செய்வியோ ஏது செய்வியோ... எனக்குத் தெரியாது. இன்னும் பதினஞ்சி நிமிஷத்திலே நீ டைனிங் டேபிளுக்கு வந்தாகணும். இல்லன்னா உன்னை விட்டுட்டு நான் சாப்ட்ருவேன்.''

''உங்க அம்மா அப்பா...?''

''ஃபோட்டோல இருக்காங்க. டெய்லி நான்தான் பூ வெக்கறேன். சந்தனம் வெக்கறேன்.''

''ஸாரி...!''

''எதுக்கு? இதோ பார்.. எல்லாத்துக்கும் ஸாரி சொல்லிட்டிருக்காதே.. எங்க அம்மா அப்பா ரெண்டு பேரும் ஒரு ட்ரெயின் ஆக்ஸிடென்ட்ல போய்ட்டாங்க. தாத்தா, பாட்டிதான் எங்களை வளத்தாங்க. அவங்க ரெண்டு பேரும் இப்ப கிராமத்தில இருக்காங்க. அவங்களைப் பாக்கணும்னா சொல்லு. வண்டி எடுத்துக்கிட்டு நாளைக்கே போய்ப் பாத்துடுவோம். தாத்தாவும், பாட்டியும் ஒங்கிட்டப் பேச ஆரம்பிச்சாங்கன்னா, எங்கூட ஏண்டாப்பா ஃப்ரண்ட்ஷிப் வெச்சிக்கிட்டோம்னு உன்னையே நீ நொந்துக்கற மாதிரி பண்ணிடுவாங்க....''

ஸ்ரீநாத் சொல்லி விட்டு ஆர்ப்பாட்டமாக ஒரு சிரிப்புச் சிரித்தான்.

**சா**ப்பிட்டு முடித்த பின் ஸ்ரீநாத் அவனை மொட்டை மாடிக்கு அழைத்துச் சென்றான். மொட்டை மாடியில் ஒரு ஷாமியானா போடப்பட்டு, ஷாமியானாவிற்குக் கீழ் இரண்டு சோஃபாக்கள், ஒரு டீப்பாய். ஸ்ரீநாத் சோஃபாவில் உட்கார்ந்தான். பிருத்விராஜிற்குக் கை காட்டினான்.

''வழக்கமா நானும் புனிதாவும் இங்க வந்து உக்காந்து அரட்டை அடிப்போம். இன்னிக்கு நானும் நீயும்.''

அந்த மொட்டை மாடியில் இருந்து சுற்றிலும் பார்த்தான் பிருத்விராஜ். தூங்கப் போய் விட்ட நகரம் அங்கங்கே தெரு விளக்குகளுடன் மௌனமாகத் தெரிந்தது. தூரத்தில் ஸோடியம் விளக்கு வெளிச்சத்துடன் கூடிய சாலை. சாலையில் பிளாட்ஃபாரம் அருகே இரண்டு பேர் போஸ்டர் ஒட்டிக் கொண்டிருந்தார்கள்.

''டைரக்டர் மெட்ராஸுக்கு வந்தவுடனே ஃபோன் பண்றேன்னு சொன்னார். ஃபோனே பண்ணலை போல இருக்கே?'' என்றான் பிருத்விராஜ்.

''யார் சொன்னது? டைரக்டர் ஃபோன் பண்ணாரே...''

''அப்படியா?'' என்றான் ஆச்சரியத்துடன்.

''ஆமா! அவருடைய போன படம் சென்சார்ல மாட்டிருச்சி.''

''எங்கிட்ட சொல்லவே இல்லியே!''

''அவசியம் இல்லேன்னுதான். இளங்குமரன் பஞ்சாப் தீவிரவாதிங்களை மையமா வெச்சி எடுத்திருந்தார். லைட்டா அவங்களை சப்போர்ட் பண்ற மாதிரி இருக்கும்... அதனால கத்திரி.''

''இப்ப என்ன ஆகும்?''

''ரீ–ஷூட் பண்ண வேண்டி இருக்கலாம்.. இல்ல படத்தை வெட்ன இடம் போக பாக்கி இருக்கிற எடத்தைக் கோத்து ரிலீஸ் பண்ண வேண்டி இருக்கலாம்.. இளங்குமரன் பாம்பே வரைக்கும் போய்ட்டு வந்திருக்காரு... அங்கயும் ஒண்ணும் முடியலை... இண்டஸ்ட்ரியில இளங்குமரனுக்கு வேண்டாதவங்க ஒரு மாதிரி லெட்டர் எல்லாம் எழுதிப் போட்டு.... ப்ச்.''

''இப்ப டைரக்டர் மெட்றாஸ்ல இருக்காரா இல்லியா?''

''பாம்பேலதான் இருக்காராம்'' என்றான் ஸ்ரீநாத். அதற்கு மேல் அந்த விஷயத்தைப் பேசப் பிரியம் இல்லாதவன் போல, அணிந்திருந்த ஜிப்பா பாக்கெட்டிலிருந்து ஒரு சிகரெட் பாக்கெட்டை எடுத்தான். அதன் மேல் சுற்றப்பட்டிருந்த பாலிதீன் பேப்பரை உரித்து எரிந்து விட்டு, சரிகைத் தாளை நீக்கி ஒரு சிகரெட்டை எடுத்து உதட்டில் பொருத்திக் கொண்டான்.

பாக்கெட்டை பிருத்விராஜிடம் நீட்டினான்.

''நான் சிகரெட் பிடிக்கறதில்ல'' என்றான் பிருத்விராஜ்.

ஸ்ரீநாத் சிகரெட்டை உதட்டில் பொருத்திக் கொண்டு, லைட்டரைத் தட்டினான்.

'போயே போச்சு!'

'இட்ஸ் கான்!'

'காயப்!'







# போயே போச்சு!




## வலியும் வேதனையும் மாயமாய் மறைகின்றன!

பத்து இயற்கை மூலப்பொருட்களின் இதம் தரும் கலவை- இதுவே அமிர்தாஞ்சன். 90 ஆண்டுகளுக்கும் மேலாக மக்களின் பரிபூரண நம்பிக்கைக்குப் பாத்திரமானது.

தலைவலி, உடல்வலி, சுளுக்கு — எதுவாக இருந்தாலும் லேசாகத் தேய்த்தாலே போதும். நீங்கள் உணரும் முன்னரே உங்கள் வலியும் வேதனையும் மறைந்தே போய்விடும்!

# அமிர்தாஞ்சன்

மீண்டும் புன்னகை மலரச் செய்கிறது — விரைவாக!

**அமிர்தாஞ்சன் லிமிடெட்**



OBM 824 TM



"நான் அப்பவே சொல்லலே...? நம்ம ஆபீஸ்ல, இந்த மாசத்திலேருந்து 'சம்பளத்தை' 'உயர்த்தி'த் தர்றாங்கன்னு..."

— ஆர். வசந்தகுமார்.

---

'க்ளிக்.'

ஜோதி அவன் முகத்தை டிராமடிக்காக வெளிச்சம் போட்டுக் காட்டியது. அவன் லைட்டரைப் பாக்கெட்டில் போட்டுக் கொண்டு, பக்கத்தில் உட்கார்ந்திருந்த திலகாவைப் பார்த்தான்.

"இவ்வளவு சிகரெட்டா குடிப்பீங்க ஒரு நாளைக்கு?" என்றாள் திலகா.

ஷில்பாவின் சினியா ஆடையில் இருந்து ஒன்றை உருவி எடுத்து அணிந்து வந்திருந்தாள். அது முழங்கால் வரை நீண்டது. முழங்கால் வரை நீண்டதிலும், ப்ளேடு வைத்து நீளமாகக் கோடு இழுத்த மாதிரி ஒரு வெட்டு. திலகா தொடையை மறைக்கக் கொஞ்சம் சிரமப்பட்டாள்.

சந்திரன் அவள் கேட்ட கேள்விக்குப் பதில் சொல்லாமல் அவளையே பார்த்துக் கொண்டிருந்தான். அவளுடைய உதட்டை ஒரு முறை கிள்ளி விட்டான்.

"ஷில்பா படத்தை ரெண்டு மூணு பத்திரிகையில பாத்தேன் திலகா. ஷில்பாவைப் பாத்த டைரக்டர் ஒன்னைப் பாக்காம விட்டுட்டான் போல. பாத்திருந்தா ஷில்பாவை ஒதறி விட்டுட்டு ஒன்னைத்தான் ஹீரோயினா புக் பண்ணியிருப்பான்...."

"நெஜம்மா?"

"சத்தியமா. ஷில்பாவை விட நீதான் அழகு" என்றான்.

கையை உதட்டிலிருந்து கீழே இறக்கினான்.

ஸ்டெல்லா மேரீஸ் கல்லூரிக்குப் பக்கத்தில் இருந்தது அந்தச் சாலை. இரு பக்கமும் அடர்ந்திருந்த மரங்கள். இருட்டு. சுவர்க்கோழி ரீங்காரம். தனிமை. இவற்றுக்கு இடையில் சந்திரனின் கருநீல மாருதி நின்றிருந்தது. சுத்தமாக எல்லாக் கண்ணாடிகளும் ஏற்றிவிடப்பட்டிருந்தன.

"சந்திரன்... வேண்டாம்" என்றாள் திலகா, ஹீனமாக.

"ஏன் திலகா? புடிக்கலையா?" என்று கேட்டான் சந்திரன். அவன் குரல் ஒரு மாதிரி ரகசியமாக, கிடாரின் அடி நரம்பை மீட்டின மாதிரி இருந்தது.

"ராணி அக்கா தேடும்."

"அவ்வளவுதானே. எப்பவும் போல ஃப்ரெண்ட் வீட்டுக்குப் போனேன்னு சொல்ல வேண்டியதுதானே...."

"ப்ளீஸ் வேண்டாம் சந்திரன்."

"ப்ளீஸ் வேணும் திலகா."

அஸ்வின்குமார் அவனது அந்தரங்க அறையில் உட்கார்ந்திருந்தான். எதிரில் அவனுடைய சம்சா ஒருவன் உட்கார்ந்து மேல் மூடியை 'ப்ளப்' என்று ஓசைபடத் திறந்து ஒரு கோப்பையை எடுத்து அதில் ஸ்காட்சை சரித்தான். பக்கத்தில் இருந்த ஒரு தெர்மாஸ் ப்ளாஸ்கில் கொஞ்சம் நீரில் மிதந்து கொண்டிருந்த ஐஸ் கட்டிகளில் ஒன்றை எடுத்து, கோப்பையில் நழுவ விட, அஸ்வின்குமார் அந்தக் கோப்பையை வாங்கி உடனே சரித்துக் கொண்டான்.

"இது நாலாவது லார்ஜ் அண்ணே."

"என் வீடு. என் பணம். என் ஸ்காட்ச். நான் குடிக்கறேன்." ஸ்காட்ச் என்னதான் காஸ்ட்லியான சமாசாரமாக இருந்த போதிலும் அவனது ரத்தத்தில் கலந்து அவனைத் தள்ளாட வைத்தது. குரலை மாறச் செய்திருந்தது.

"ஊத்து... இன்னொண்ணு ஊத்து."

"நாளைக்காகக் கொஞ்சம் மிச்சம் வச்சிக்குங்க அண்ணே."

"ஊத்துரா! டேய் உம் பேரென்ன?"

"மயில்வாகனம்."

"என்னடா பேரு அது... மயில்வாகனம்... என்னைப் பத்தித் தெரியுமில்ல ஒனக்கு?"

"தெரியுண்ணே."

"நான் ஏதாவது வேணும்னு கேட்டா அது வந்தாகணும் என்கிட்ட."

"ஆமாண்ணே."

"வரமாட்டேன்னிடுச்சிடா!"

"எதுண்ணே?"

"அந்த ஷில்பாப் பொண்ணு...."

"கூப்டீங்களாண்ணே?"

"ஏண்டா பச்சையாவா கூப்புடு வாங்க....!"

அஸ்வின்குமார் பொறுமையின்றி ஸ்காட்ச் பாட்டிலை அப்படியே எடுத்து சரித்துக் கொண்டான்.

"ஏய்... மயில்வாகனம்... எனக்கு ஷில்பா வேணும்..."

"கூட்டிட்டு வந்துரலாங்க..."

"எக்ஸ்ட்ரா ஏதாவதைக் கூட்டிட்டு வந்துரப் போறே... நான் சொல்ற மாதிரி செய்.. நாலஞ்சி பேரைக் கூட்டிக்க. அண்ணா நகர்லயோ என்னவோ அவ வீடு... போ.. இப்பவே போ... அவ அப்பன் இருப்பான். ஜூபிடர் ரத்தினம்... நான் அனுப்புனேன்னு சொல்லு... அவனே ஷில்பாவோட பெட்ரூம்வரைக்கும்கூட்டிட்டுப்போய்விடுவான்.. அவனைத் தூக்கிட்டே வந்துருங்க... நேத்து வந்தவன்யா அந்தப்பய... பிருத்விராஜன்.. அவன் சொன்னாத்தான் கேப்பாளாம்... அவன்..... ம்ஹூஹூம்... நீ போய்த் தூக்கிட்டு வாடா... மிச்சத்தை நான் பாத்துக்கறேன்...."

அஸ்வின்குமார் தள்ளாடி எழுந்தான். சிவப்புக் கண்கள் மேலும் சிவப்பாகிற மாதிரி ஸ்காட்ச் பாட்டிலைச் சரித்துக்கொண்டான். படுக்கைக்குப் பக்கத்தில் இருந்த லாக்கரைத் திறந்து நூறு ரூபாய்க் கட்டு ஒன்றை எடுத்து வீசினான். (தொடரும்)



## இந்த மனிதர்
## சமூகப் பாதுகாப்புத் திட்டத்தில்
## சேர தகுதியுடையவர்.

# இவரை அடையாளம் காண எங்களுக்கு உதவுவீர்களா?

நாங்கள் இந்தப் மனிதரைச் சந்திக்க விரும்புகிறோம். மேலும் இவரைப் போன்ற இலட்சக்கணக்கானவர்களையும் சந்திக்க விரும்புகிறோம். ஒரு நெருக்கடியான நேரத்தில் நாங்கள் அளிக்கக்கூடிய சிறிதளவு பாதுகாப்பு பற்றி அவர்களுக்குச் சொல்ல நினைக்கிறோம். இதனைச் செய்ய நீங்கள் எங்களுக்கு உதவ முடியும். ஏனெனில், நீங்கள் இவர்களை அன்றாடம் சந்திக்கிறீர்கள் - உங்கள் பணியாளர், சலவைத் தொழிலாளி, தோட்டக்காரர், பாதை ஓரத்தில் பணி புரியும் செருப்புத்தைப்பவர். இவர்களைச் சந்திக்கும் போது, தனிநபர் விபத்து சமூகப் பாதுகாப்புத்திட்டம் பற்றி எடுத்துக் கூறுவதன் மூலம், நீங்கள் அவர்களுக்கு ஒரு சிறந்த உதவி புரிந்தவர்கள் ஆவீர்கள்.

பாம்புக்கடி, உயரமான இடத்திலிருந்து கீழே விழுதல், நச்சு உணவு, நீரில் மூழ்குதல் இது போன்ற விபத்து, ஒரு குடும்பத்தில் சம்பாதிக்கும் நபரின் விலைமதிப்பில்லா உயிரைப் பறிக்கக்கூடும். ஆண்டு வருமானம் ரூ. 7200க்குக் குறைவாகப் பெறும் குடும்பங்களில், 18 முதல் 65 வயது வரையுள்ள சம்பாதிக்கும் நபர்களுக்கு இந்த தனி நபர் விபத்து சமூகப் பாதுகாப்புத் திட்டம் பொருந்தும். இந்த வருமான வரம்புக்கு உட்பட்ட குடும்பத்தில் சம்பாதிக்கும் நபர்களில் யாரேனும் ஒருவர் விபத்து காரணமாக இறக்க நேர்ந்தால், அந்தக் குடும்பம் ரூ. 3000 நஷ்ட ஈடு பெறத் தகுதிபெறுகிறது. இதற்கு, முன்கூட்டியே பதிவு செய்து கொள்ளவோ, கட்டணம் செலுத்தவோ தேவையில்லை. இத்திட்டம் பற்றிய விபரங்களை மகிழ்வோடு உங்களுக்கு அளிக்க தென்னிந்தியாவிலுள்ள "யுனைடெட் இந்தியா"வின் அலுவலகங்கள் காத்திருக்கின்றன.

இதற்கிடையில், இத்திட்டம் பற்றி அனைவருக்கும் தெரிவிப்பீர்களா?

**இந்திய அரசு**

**தனி நபர்விபத்து சமூகப்பாதுகாப்புத்திட்டம்**



**யுனைடெட் இந்தியா**

**இன்ஷ்யூரன்ஸ் கம்பெனி லிமிடெட்**

(ஜெனரல் இன்ஷ்யூரன்ஸ் கார்ப்பரேஷன் ஆப் இந்தியாவின் ஒரு அங்கம்)

24, ஒயிட்ஸ் சாலை, சென்னை - 600 014.

**இத்திட்டம் பற்றி அனைவர்க்கும் உணர்த்த எங்களுக்கு உதவுவீர்.**

# கறுப்பு கை

புருஷோத்தமன்

**பெ**ரியமருது சுவரோடு சுவராகச் சுண்ணாம்பு போல ஒட்டியிருந்தான். சுவர் தூய ஜான் போஸ்க்கோ நடுநிலைப் பள்ளிக்குச் சொந்தமானது. ஒன்றரை வருட இடைவெளிக்குப் பின் அவன் பள்ளிக் கூடத்தில் நிற்கிறான். வகுப்புக்கு வெளியே நிற்பது அவனுக்கு ஒன்றும் புதிதல்ல. நோட்டுப் புத்தகம் வாங்காததற்கு, கொடிக் காசு தராததற்கு இப்படி அனேகம் தடவை நின்றிருக்கிறான். ஆனால் இப்போது கள்ள ஓட்டுப் போட க்யூவில் நிற்கிறான்....

சின்ன நீலம் கலந்த காகிதத் துண்டை பயபக்தியோடு சுமந்து பூத்தினுள் நுழைந்தான். வாசலையொட்டியே, நாற்காலியில் போலிங் ஆபீசர் உட்கார்ந்திருந்தார். மூலையில் சின்னப் பாட்டில், மருந்துப் புட்டி போல. வெளியே ஈர்க்குச்சி நீட்டிக் கொண்டிருந்தது. அவருக்குப் பக்கவாட்டில் பெஞ்சில் நான்கு பேர், அதிகாரி போலவே இருந்தார்கள். வேட்பாளர்களின் ஏஜெண்டுகள். எதிர்ப்புறம் மேஜை மீது இரண்டடி உயரத்தில் அட்டை மறைப்பு. பக்கத்தில் ஓர் அம்மாள் நீளமான இரும்புத் தகடு வைத்துக் கொண்டு சரளமாகப் பேசி அமைதி தரும் பயத்தைக் கொஞ்சம் போக்கிக் கொண்டிருந்தாள். சுவரில் அங்கங்கே சதுர, செவ்வகமாகப் பளிச் சென்று இருந்தது. இரண்டு குழந்தைகளுக்குத் தாயாக இருக்கும் அம்மாள் வாய் நிறைய வெட்கத்தை அடக்கிக் கொண்டு மடித்த நீளமான காகிதத்தைப் 'பொதுக்' கரிடம் நீட்டினாள். 'அக்கா அங்கே குடு' என்றான் பெஞ்சில் இருந்தவன். ஸ்டூல் சுமந்த **ஒரு** பெட்டி பக்கத்தில் நிற்கும் அம்மாளைக் காட்டினான். அம்மாள் பேச்சு நிறுத்தாமல் வாங்கி **அதே** பெட்டியில் போட்டு, துவாரத்தில் செலுத்தி, நீளத் தகடை ஒருமுறை உள்ளே விட்டு எடுத்தாள்.

போலிங் ஆபீசர், மருதுவின் காகிதத் துண்டை வாங்கி, கொஞ்சம் பேப்பரைப் புரட்டிக் கண்டுபிடித்து, இவனை மேலும் கீழும் பார்த்தார். மினுமினுவென்ற கறுப்பில் ஐந்தடிக்குப் பக்கமா உயரம். முகத்தைப் பார்த்தால் முடி முளைப்பதற்கான பக்குவம் கூட இல்லாமல் தரிசாக-பால்வாசம்! எண்ணெய்ப் பசையில் சாயம் மங்கிய லுங்கி. வயிற்றைச் சிரமப்பட்டு மறைத்திருக்கும் சட்டை. வயதைச் சரியாக அனுமானிக்க முடியாததால் அதட்டலாகக் கேட்டார்.

"பேரு என்ன.....?"

"கோவிந்தசாமி சார்!"

"வயசு?"

"இருவத்தியொண்ணு சார்!"

லிஸ்டில் ஒப்பிட்டுப் பார்த்தார்.

முக்கிய கட்சியின் ஏஜெண்ட் கேட்டான். "டேய் நீ துர்க்கா விலாஸ்ல தானே வேலை செய்யிற....?" தலையாட்டினான்.

"ரெங்கசாமி நாய்க்கர் தெருன்னு சிலிப் கொண்ணாந்திருக்க.....?" — கேட்டார் போலிங் ஆபீசர்.

நீலத் துண்டு காகிதத்துக் கட்சி ஏஜண்ட், "ஆமாப்பா! துர்க்கா விலாஸ்ல வேலை செய்றான். ரெங்கசாமி நாய்க்கர் தெருவுல குடியிருக்கான். நீங்க குடுங்க சார். இந்த ஓட்டுக்கு நான் பொறுப்பு" என்றான்.

கேள்வியை ஆரம்பித்தவன் அடுத்துக் கேள்வி கேட்க முடியாமல் தடுமாறினான்.

"இருக்கட்டும் தம்பி. அப்பா பேரு சொல்லுப்பா" — இது ஒரு சுயேச்சையின் ஏஜண்ட்.

"அப்பா பேரு..." மேலே பார்த்து, நெற்றி சுருக்கி, தலையைச் சொறிந்து, வரவில்லை... குழப்பத்தில் மறந்து போனது.

"என்ன மறந்து போச்சா?"

தலை குனிந்திருந்தது.

"அப்பன் பேரை ஞாபகமாச் சொல்றவனை அனுப்பக் கூடாது?"

பூத் சிரித்தது. சமாளிக்க முயன்ற ஏஜண்டும் சிரித்தார்.

"அப்பன் பேரு தெரியாதவனைப் பாத்திருக்கோம், அப்பன் பேரு மறந்தவனைப் பார்க்க முடியுமா? இன்னிக்குப் பார்க்கலாம் சார் இன்னும் வகை வகையா. உள்ள ஒக்காந்திருக்கறவன் எல்லாம் காதுல பூ சுத்திட்டு இருக்கான்னு நெனச்சான்களா? பன்னிரண்டு வயசுப் பையங்கிட்ட இருவத்தியொரு வயசு சிலிப்பைக் குடுத்தனுப்புறானுக! சார், பையனை அனுப்பாதீங்க. அனுப்பினா இன்னங் கொஞ்ச நேரங் கழிச்சு இதே சிலிப்பை வேறொருத்தன் கொண்டு வருவான். இதே பொழப்பு!" — வாய்ப்பைப் பயன்படுத்திப் பொரிந்து தள்ளினான் சுயேச்சை ஏஜண்ட். மருதுவை நிறுத்தி விட்டார்கள்.

**ஒ**ருநாள் லீவு அனாவசியமா போச்சே என்பதுதான் அவன் கவலையெல்லாம். எப்போதும் அவனுக்கு விடுப்பு கிடைப்பதேயில்லை. ஏதாவது பந்த், தலைவர்கள் சாவு என்றால்தான். இப்போது தேர்தல்! இப்படித்தான் என்றைக்காவது ஒருநாள் கிடைக்கும். முக்கிய வேட்பாளர்கள் இருவர் இவன் முதலாளிக்கு வேண்டியவர்கள். ஒருவர் மாற்றி ஒருவர் வேட்பாளர்களே நேரில் வந்து 'தலைவரே லீவுதானே? லீவு விட்டு நீங்க.... கண்டிப்பா விட்டுறணும்' என்று

நச்சரித்தார்கள். இருபத்தியொரு ஓட்டா யிற்றே. சும்மாவா? அவரும் 'பொல்லாப்பு வேண்டாம் பசங்களை ஆளுக்குப் பத்துப் பேரு போட வச்சிர வேண்டியதுதான்' என்று தீர்மானித்து விடுப்பு விட்டிருந்தார். கடையில் வேலை செய்யும் அத்தனை பேரும் சொல்லப்பட்ட சின்னத்தில் முத்திரையிட்டு ஜனநாயக உரிமையைப் பயன்படுத்த வேண் டும் என்பது முதலாளி உத்தரவு. மருதுக்கு ஓட்டுப் போடும் நினைப்போ ஆசையோ முதலில் இல்லை.

கடைக்கு வண்டி வந்தது. இதை விட்டால் வேறு வாய்ப்பேது? சவாரி செய்யலாம் என்று 'சும்மா' ஏறி அமர்ந்தான். லீவு நாளில் ஆர அமரத் துணி துவைக்கணும், (மற்ற நாளில் என்றால் வாரத்தில் மூன்று நாள், வியாபாரம் மந்தமாக இருக்கும் மூன்று மணிக்குப் போய் விட்டு நான்கு மணிக்குள் துணி துவைத்து, குளித்துத் திரும்ப வேண்டும்) ஏரியில் எருமை மாடு மாதிரி ரொம்ப நேரம் கெடக்கணும், மேட்னி சினிமா பார்க்கணும், ராத்திரி எட்டு மணிக்கெல்லாம் படுத்துத் தூங்கணும் என்றுதான் நினைத்திருந்தான். ஆனால் வண்டியைப் பார்த்ததும் ஏறி விட்டான்.

வண்டி விட்டு இறங்கியதும் இவன் கையிலும் சீட்டுக் கொடுத்தார்கள்.

"அண்ணே எனக்கு ஓட்டு இல் லேண்ணே!"

"கவருமெண்ட்டு என்னடா ஓட்டு தர்றது, நான் தர்றேண்டா. நாமதாண்டா கவரு மெண்டு. போ மை வச்சிக்கிட்டு வா" என்று கன்னத்தில் செல்லமாகத் தட்டி 'சிறப்பான வாசனை'யோடு சொன்னான் ஒருவன்.

பார்வை ஓரிடத்திலும் சிந்தனை ஓரிடத் திலும் இருந்தது. க்யூவிலிருந்து குழந்தை அழும் சத்தம் கேட்டுக் காலிருந்த இடத்திற்கு அவன் மனம் திரும்பியது. எதிர்த்தாற்போல் பள்ளி அலுவலக மாடியில் ஏசு அறையப் பட்டிருந்தார். ஏசுவைப் பார்த்தவன் தன் னைப் பார்த்தான். என்னை மாதிரியேதான் ஏசு சாமியும் நிக்குது. யாருடைய கவனமா வது தன் மீது இருக்கிறதா என்று நோட்டம் விட்டான். வாசலின் அடுத்த பக்கம் நின் றிருந்த போலீஸ் துப்பாக்கியைச் சுவரில் சாத்தி விட்டு, நான்கைந்து வெள்ளை வேட்டி சட்டை கும்பலுக்கிடையே நின்று புகைத்துக் கொண்டிருந்தார். கைகள் இரண் டையும் மார்புக்கு நேராக உயர்த்தினான். தலையை லேசாகக் கவிழ்த்துக் கொண் டான். பாதி விழிகளால் ஏசுவைப் பார்த் தான். கற்பனையை நினைத்துச் சத்தமில் லாமல் சிரித்துக் கொண்டான். பழைய நிலைக்கு வந்தான்.

பார்வையால் நீண்ட க்யூவை அளந்தான். அடேயப்பா எம்புட்டு பெரிய நீளம். சினிமா கொட்டாய்ல பார்க்காத, ரேசன் கடையில் பார்க்காத, ஊர்ல வேட்டி சேலை தந்தாங் களே அப்பகூடப் பார்க்காத நீளம்! வரிசை யில் அந்த அம்மாவைப் பார்த்தான் — வெற்றிலைக் கடைக்கார அம்மா. காய்கறி மார்க்கட்டில் கடை பரப்பி வைத்திருக்கும் அவள், இவன் அம்மாவைப் போலவே இருப்பாள்.

இவன் அம்மா கறுப்பு. இந்தம்மா கொஞ் சம் நிறம். இவளைப் பார்க்கும்போதெல்



லாம் அம்மாவைக் கண்ட திருப்தி கொள்வான். இங்கு வந்து துர்க்கா விலாஸில் சேரும் முன் இவனுக்கு அம்மாவைப் பிடிக்காது. 'இந்த அவுசாரி எனக்கு அம்மாவா? ஊருல எல்லாரும் சாப்ட்டுப் படுக்கற நேரத்துல எனக்குச் சாப்பாடு போடுவா. ஒரு நாளாவது தலக்கி எண்ண தடவி தல சீவி விட்டுப் பள்ளிக்கூடம் அனுப்பி இருக்காளா? விடிஞ்சி விடியாமுன்ன எந்திரிச்சி எனக்கென்னன்னு வேலைக்குப் போயிருவா! ஒரு தடவையாவது கேட்ட ஒடனே காசு தந்திருக்காளா? வாத்தியார்கிட்ட நாலஞ்சி தடவை உதை வாங்கினதுக்கப்பறந்தான் நோட்டுப் புத்தகத்துக்குக் காசு தருவா. எப்ப எதைக் கேட்டாலும் ஒங்கப்பங்கிட்ட போயி கேளும்பா. எங்கப்பன் ஊர்ல இருந்தா, இல்லேன்னா சொல்லும். அதுக்கு ஆயிரம் வேலை! எந்த நேரமும் மொதலாளி 'பைக்கு'ல கூட்டிக்கிட்டு அலையுறாரு. அப்பா ஊருக்கு வர்றப்ப எல்லாம் பழம், மிக்சர், அது இதுன்னு திங்கிறதுக்கு வாங்கிட்டு வரும். துவைத்த வெள்ளை வேட்டி சட்டை போட்டுருக்கும். ஒன்னை மாதிரியா கிழிஞ்ச சேலையை அழுக்காகக் கட்டிக்கிட்டு இருக்கச் சொல்றே! ஒண்ணுமே தெரியாத அம்மா எப்பவும் அப்பா கூட சண்டை போடுது. சே! சனியன்' என்று நினைப்பான்.

ஊரிலிருந்து பஸ் ஏறும் போது மகிழ்ச்சியாகத்தான் இருந்தது. இந்தச் சனியன் நம்மை விட்டால் போதும் என்று நினைத்தான். இங்கு வந்த நான்கைந்து நாட்களில் தவித்துப் போனான். முதலாளியின் சம்பந்தமில்லாத திட்டு. இவனை விடப் பெரிய பையன்களின் கிண்டல். நாளாக நாளாகக் கணிப்பு மாறியது. அம்மா நல்லவள் என்று நினைத்தான். என்னவோ சரியான காரணம் தெரியவில்லை. மார்க்கெட் போன போது வெத்தலைக்காரம்மாளைக் கண்டதில் இருந்து அம்மாவைக் கண்ட திருப்தி.

மாதா மாதம் முதலாளி இவன் சம்பளம் முப்பது ரூபாயைச் செல்வராசிடம் கொடுத்து மணியார்டர் செய்யச் சொல்வார். பேட்டா காசில் சோப்பு, சினிமா செலவு போக பதினைந்தோ, இருபதோ சேர்க்க முடிந்ததைச் சேர்த்து, செல்வராசிடம் தந்து, "இதையும் அனுப்பிரு" என்பான். தான் அனுப்பும் காசை என்ன செய்ய வேண்டும் என்று யோசனை சொல்லிக் கடிதம் எழுதுவான். கக்குவான் இருமல் இருமிக் கொண்டிருக்கும் தங்கைக்கு 'இனி நாட்டு மருந்து வேணாம், டவுனு டாக்டர்கிட்டே காட்டினால் நல்லது' என்று எழுதுவான்.

**வெ**யிலைப் பார்த்தான். 'இன்னிக்குப் பொழுது அம்புட்டுதா.....!'

வாக்குப் பதிவு மந்தமான நேரம். "டேய் பையா!" என்ற குரல் கேட்டுத் திரும்பினான். பொதுக்கர் — அதுதான் போலிங் ஆபீசர் "இங்கே வா" என்றார். போனான்.

"'சிசர்ஸ்' சொல்லு, வேணாம், 'கத்திரி, கத்திரி....'"

அவசரமாக 'சிசர்' என்றான்.

"ம்... போயி ஒரு பாக்கெட் வாங்கிட்டு வா." மூன்று ரூபாயை நீட்டினார். வாங்கி வந்து தந்தான்.

குட்...! நல்ல பையனா இருக்கே... இப்படிச் செய்யிறயே? ம்! இனிமே இந்த மாதிரி வேலை வச்சுக்காதே.... போ...

தலையாட்டி அப்படியே நின்றான், மைப் பாட்டிலைப் பார்த்தவாறு...

"என்னடா....?"

மைப் புட்டியினின்று கண் எடுக்காமல் ஓர் அடி பின்னால் எடுத்து வைத்து ஆள் காட்டி விரலை நீட்டி...

"மை மட்டும் வைங்க சார்..." என்றான்.

"எதுக்குடா மையி?" — கொஞ்சம் சிரிப்புடன், சிகரெட்டை எடுத்துக் கொண்டே கேட்டார் போலிங் ஆபீசர்.

"சார் மை வச்ச வெரலக் காட்டுனா அஞ்சு ரூவா தருவாங்க சார். எங்கம்மாக்கு அனுப்புவேன். அது ரவிக்கை எடுத்துக்கிரும் சார்... எனக்கு ஓட்டு வேணாம்.. மை மட்டும்..."

பூத்தில் இருந்தவர்களில் யாரேனும் ஒருவர் சிரித்திருந்தால் எல்லோரும் சிரித்திருப்பார்கள்... ஆனால் தலையைத் தாழ்த்தி மௌனமாக இருந்தார்கள்...!

---

மாப்பிள்ளை: நான் கேட்ட ஸ்கூட்டருக்கு உன் அப்பா என்னதான் சொல்றார்?

அரசியல்வாதியின் பெண்: உங்க கோரிக்கையைக் கொள்கை அளவில் ஒத்துக்கிட்டாராம். போதிய நிதி ஆதாரம் கிடைச்சதும் கவனிக்கக்கிறேன்கிறார்!

— கீழை. அ. கதிர்வேல்.



திருபர்: வறட்சி, வெள்ளம், தண்ணீர்ப் பஞ்சம், விலைவாசி உயர்வு, வேலையில்லாத் திண்டாட்டம், மாநில சுயாட்சி பற்றியெல்லாம் எப்ப சிந்தித்துப் பார்க்கப் போறீங்க?

மத்திய அமைச்சர்: எதிர்க்கட்சி ஆட்சிக்கு வந்த பிறகு....

— மணியன் தர்மலிங்கம்.





* ஈ.வெ.ரா.: ''ராஜாஜியின் சூழ்ச்சிக்குப் பலியாகாதீர்!''





* ஸி. என். ஏ.: திட்டத்தை எதிர்த்துச் சிறைவாசம்...

# வெகுண்டெழுந்த எதிர்ப்பு வெள்ளம்!

ஜாதிப் பிரிவினையை நிரந்தரமாக்கப் பார்க்கிறார் என்றும் உயர் ஜாதியினரின் ஆதிக்கத்தை சாசுவதப் படுத்த முனைகிறார் என்றும் ஸி. ஆர். மீது சுமத்தப்பட்ட குற்றச் சாட்டுக்கள் எதிர்பார்த்த பலனை அளித்தன. ஸி. ஆருடைய திட்டம் கீழ் ஜாதி சிறுவர்களைத் தங்கள் தகப்பனாரின் தொழிலையே தொடர்ந்து செய்யுமாறு நிர்ப்பந்திக்கும் என்று பல கட்சிகளும் அமைப்புக்களும் உரக்கக் கூச்சல் போட்டுப் பிரசாரம் செய்தன. கிராமப் புறங்களில் உள்ள தொழில் நுட்பத் திறமைகளைக் காக்கவும் அவற்றைப் பரவலாக்கவும்தான் ஸி. ஆர். முயல்கிறார் என்பது மறைக்கப்பட்டது. சிறுவர்கள் முகத்தில் நிம்மதியையும் புன்னகையையும் ஸி. ஆர். பார்த்தார்; அவர்கள் கரங்களுக்குத் தொழில் நுட்பத் திறன் திரும்புவதைக் கண்டார். ஆனால் அந்தச் சிறுவர்களின் தகப்பனார்களில் சிலர், ஸி. ஆரின் இதயத்தில் துவேஷம் குடிகொண்டிருப்பதாக நம்பினார்கள். இந்த நம்பிக்கையை வளர்த்து வருவதில் ஈ.வே. ராமசாமி நாயக்கர் முக்கிய பங்கு வகித்தார். ஸி. ஆரின் முதல் அமைச்சரவைக்கே முன்னாக விளங்கிய அவர், இப்போது தமிழ் ஜில்லாக்களில் சுற்றுப்பயணம் செய்து, கைபர் கணவாய் வழியாக வந்து மண்ணின் மைந்தர்கள் மீது ஆதிக்கம் செலுத்திய ஆரியர்களின் வழித் தோன்றலான ராஜாஜியின் சூழ்ச்சிகளுக்குத் திராவிடர்கள் பலியாகக் கூடாது என்று பிரசாரம் செய்தார்.

ராஜாஜியின் இதயம் இதனால் காயப் படுத்தப்பட்டது என்று சொன்னால் போதாது. அவர் சிலுவையில் அறையப் பட்டது போல் உணர்ந்தார். கெய்ரோவில் இந்தியத் தூதராக விளங்கிய கே. எம். பணிக்கர், ஹிந்து மதம் பற்றிய ராஜாஜியின் ஒரு சொற்பொழிவைப் பாராட்டி எழுத, அக்கடிதத்துக்குப் பதில் வரையும் போது ராஜாஜி பின்வருமாறு குறிப்பிட்டார்:

''நான் தென்னகத்தை மிகவும் நேசிக்கிறேன். அதன் மக்களை நேசிக்கிறேன். ஆயினும் என்ன? ஜாதிப் பிரிவினையும் அதன் விளைவான வெறுப்பும் வேரோடிப் போன இந்த மாகாணம் என்னை வெளியேற்றப் போவது நிச்சயம்.''

ஒரு பொதுக்கூட்டத்தில் ஸி. ஆர். சொன்னார்:

''என்னை எதிர்ப்பவர்கள், வேறு ஜாதியைச் சேர்ந்த யாருமே முன்னுக்கு வருவதை நான் விரும்பவில்லை என்று கூடச் சொல்லலாம். ஆனால் இது தவறான குற்றச்சாட்டு. இதை நம்புகிறவர்களைக் கண்டு நான் பரிதாபப்படுவதைத் தவிர வேறு என்ன செய்ய முடியும்? இம்மாதிரி பிரசாரம் செய்யும் நண்பர்களையும் அதனை நம்புகிறவர்களையும் மனம் மாறச் செய்ய என்னால் முடியாது; கடவுள் அருளால் அவர்கள் மனம் மாறினால்தான் உண்டு என்ற முடிவுக்கு நான் வந்து விட்டேன்.''

இம்மாதிரிமனிதர்கள், ராஜாஜி எதைச் செய்தாலும் அதில் ஜாதி உணர்வைக் கண்டார்கள். உதாரணமாக, ஸீதா சாரி என்பவரைத் தாற்காலிக விரிவுரையாளராக நியமிக்கக் கல்வித் துறை இயக்குனர் சிபாரிசு செய்தார். அதனை அரசு ஏற்றுக் கொண்டதும் உடனே, ராஜாஜியின் பிராமண ஆதரவு மனப்பான்மை செயல் பட்டு விட்டதாகக் குற்றம் சாட்டப்பட்டது. ஸீதா சாரி மாகாணத்திலேயே முதலாவதாகத் தேறியவர் என்பதும் அவரது வேறு பல தகுதிகளும் மறக்கப்பட்டன அல்லது மறைக்கப்பட்டன. இம்மாதிரி அவதூறு சுமத்துகிறவர்களுக்காக ராஜாஜி பிரார்த்தித்தார். வேறு சிலரைத் தம் பக்கம் திருப்ப வற்புறுத்தியும் பார்த்தார். அதற்காக அர்த்தமுள்ள வாதங்களைச் சமர்ப்பித்தார்: ''இப்

போதுள்ள கல்வித் திட்டம் மனப்பாடம் செய்து பரீட்சையில் தேறி விடுவதை அடிப்படையாகக் கொண்டிருக்கிறது. இது உண்மையில் பிராமணர்களுக்கே உதவி கரமாக இருக்கிறது. அவர்கள் உருப்போடுவதில் கெட்டிக்காரர்கள். ஆனால் எனது சீர்திருத்தப்பட்ட கல்வித் திட்டத்தின் மூலம் படிப்பறிவில்லாத கைவினைஞர்களுடைய குழந்தைகள் மற்றவர்களைவிட அதிக மதிப்பெண்களைப் பெற முடியும். ஏனெனில் இனி குழந்தைகள் கல்வியையும் கலையையும் ஒரே சமயத்தில் பயில்வார்கள். இந்தச் சீர்திருத்தம் ஜாதிகளை இணைக்கும்; ஜாதிப் பிரிவினையை நிரந்தரமாக்காது. உயர் ஜாதி மாணவர்கள் செருப்புத் தைக்கும் கலைஞரிடம் போக வேண்டும்; அவரது கைத்திறனைக் கண்டு கற்க வேண்டும்; அவர்களுடன் பழக வேண்டும் என்று நான் விரும்புகிறேன். ஐந்து மணி நேரம் குழந்தைகளைச் சிறைப்படுத்தியது போல் அடைத்து வைப்பது தவறு என்று கருதுகிறேன்.''

கல்வி மந்திரியாக விளங்கியவர் எம். வி. கிருஷ்ணராவ்தான். ஆனால் புதிய கல்வித் திட்டம் ஸி. ஆருடையது என்றே கருதப்பட்டது. அவர் தோள்களில் ஏறிய சுமையாகவே விளங்கியது. ஆந்திரா பிரிவினைக்குப் பிறகு கிருஷ்ணராவ் அந்த மாகாணத்துக்குப் போய் விட்டார்; இங்கு ஸி. சுப்பிரமணியம் கல்வித் துறைப் பொறுப்பேற்றார். ஆனால் ராஜாஜி திட்டமாகவே அது தொடர்ந்து இருந்து வந்தது. அதன் சிறப்புக்களைக் கண்டவர்களும் இல்லாமல் போகவில்லை. குறிப்பாக, பின்னால் நாட்டின் ஜனாதிபதியாகவே விளங்கவிருந்த கல்வியாளர் ஜாகிர் ஹுஸைன் அதனை வரவேற்றார். பீகார் மாநிலம் இந்தக் கல்வித் திட்டத்தை அமுல் படுத்தலாம் என்ற கருத்தில் முழு விவரங்களைக் கேட்டிருந்தது.

ஆனால் திட்டம் எங்கே ஏற்கப்பட வேண்டுமோ அங்கே, சென்னை மாகாணத்தில், எதிர்ப்பு பலமாக இருந்தது. அது நாளுக்கு நாள் வளர்ந்தும் வந்தது. ஆந்திரா எம். எல். ஏக்கள் பிரிந்து செல்வதற்குச் சற்று முன்னதாக, 1953, ஜூலை இறுதியில், இந்தத் திட்டம் கைவிடப்பட வேண்டும் என்பதாகச் சட்டசபையில் கொண்டு வரப்பட்ட ஒரு தீர்மானம், இருதரப்பிலும், சமமான வோட்டுக்களைப் பெற, சபாநாயகரின் முடிவான வோட்டு கல்வித் திட்டத்துக்கு ஆதரவாக விழ, அந்த ஒரு வோட்டில் தீர்மானம் தோற்றது. புதிய கல்வித் திட்டத்தைத் தாற்காலிகமாக நிறுத்தி வைத்து, ஒரு கமிட்டியின் பரிசீலனைக்கு விடவேண்டும் என்ற மற்றொரு தீர்மானம் இரண்டு வோட்டுக்கள் அதிகம் பெற்று நிறைவேறியது. ''எந்தத் தேதியில் இந்தத் தீர்மானம் நிறைவேறியதோ, அந்தத் தேதியில் கல்வித் திட்டம் எந்த அளவில் அமுலில் இருக்கிறதோ, அந்த அளவோடு நிறுத்தி வைக்கப்படும்'' என்று ஸி. சுப்பிரமணியம் சட்டசபையில் அறிவித்தார்! சட்டசபையில் நிறைவேறிய தீர்மானத்துக்கு ஓர் அற்புதமான புதிய அர்த்தம் கற்பிக்கப்பட்டிருப்பதாக எதிர்க்கட்சியினர் கேலி செய்தனர். அவர்கள் தலைவரான விசுவநாதம், 'இரண்டாவது வோட்டெடுப்பின் அடிப்படையில் ஸி. ஆர். ராஜினாமா செய்ய வேண்டும்' என்று அடித்துச் சொன்னார். தாம் எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்று விசுவநாதம் கற்றுக் கொடுத்ததற்காக ஸி. ஆர். நன்றி தெரிவித்தார்; ஆனால் விசுவநாதத்தின் கோரிக்கையை ஏற்கவில்லை.

கல்வித் திட்டத்தை எதிர்த்த பலர் சட்ட மறுப்புச் செய்து சிறை புகுந்தனர். திராவிட முன்னேற்றக் கழகத்திலிருந்து பிரிந்து வந்திருந்த ஸி. என். அண்ணாதுரை அவர்களில் ஒருவர். திட்டத்தின் சார்பில் வாதாடிய ஸி. ஆர்., 'பள்ளி நேரத்தைக் குறைத்து இரட்டிப்பு எண்ணிக்கையில் மாணவர்களைப் படிப்பிக்கலாம்' என்று மட்டும் கூறியிருந்தால் எதிர்ப்பு அவ்வளவாக இருந்திருக்காது. ஆனால் கிராமப்புறத் தொழில்நுட்பக் கூடங்களின் நற்பயன்கள் குறித்து அவர் கற்பனை செய்தது மிக அதிகமாக இருந்தது. இதுவே ஈ. வே. ரா., அண்ணாதுரை, மற்றும் பலருக்கு, ஜாதிப் பிரிவினைக் கண்ணோட்டத்தில் கல்வித் திட்டத்தைக் குறைகூற வாய்ப்பளித்தது. வெற்றி வாய்ப்பை வெள்ளித்தட்டில் வைத்து ஸி. ஆர். அவர்களுக்குப் பரிசளித்ததாயிற்று.

புதிய கல்வித் திட்டத்துக்கு மதுரை ஜில்லாவில்தான் அதிகமான எதிர்ப்புப் பிரசாரம் நடந்தது. அந்த ஜில்லாவில்தான் பள்ளிக்கூடம் போகும் குழந்தைகளின் எண்ணிக்கை நாற்பது சதவீதம் அதிகரித்திருக்கிறது என்று அந்த ஆண்டின் இறுதியில் ராஜாஜியால் புள்ளி விவரங்களுடன் நிரூபிக்க முடிந்தது. பிள்ளைகள் பெறும் கல்வியில் பள்ளிக்கூடத்துக்கு வெளியே உள்ளவர்களும் சிரத்தை எடுத்துக் கொண்டு ஒத்துழைப்பதை ஸி. ஆர். சுட்டிக் காட்டினார். 'இந்த மாற்றம் புதிய கல்வித் திட்டத்தினால் மட்டுமே சாத்தியமாயிற்று. மேலும், இந்தச் சீர்திருத்தம் நவீனமானது; பிற்போக்கானது அல்ல' என்று வாதாடினார். இதற்கு அமெரிக்கக் கல்வியாளர்களின் கருத்துக்களை மேற்கோள் காட்டினார். 'குழந்தைகள் குடும்பத் தொழில் அல்லது கிராமத்தின் தொழிலில் தொடர்பு கொள்வது மிகுந்த மதிப்புடையது' என்று அந்தக் கல்வியாளர்கள் கூறியிருந்தனர். சென்னை மாகாண சட்டசபையின் வேண்டுகோளுக்கு இணங்கி புதிய கல்வித் திட்டத்தை ஆராய்ந்த பரிசீலனைக் குழு, திட்டத்துக்கு ஆதரவாகவே தனது அறிக்கையைச் சமர்ப்பித்தது. ஆனால் எதிர்ப்பு வெள்ளம் எல்லா வாதங்களையும் அடித்துக் கொண்டு போய் விட்டது! பெருகி வந்த இந்த எதிர்ப்பு வெள்ளத்தினால் பலனடைந்தவர் காமராஜ்.

(தொடரும்)

இளைஞர்களின்
மனதைக் கெடுக்காமல்
அவர்களின் அறிவைப்
பெருக்கும் பத்திரிகை
உண்டா? உண்டு!
அது – நவம்பர் 1-ம்
தேதி முதல்
வெளிவருகிறது.

மறவாதீர்!

மணியன் மாத இதழ்

டைஜஸ்ட்



96 பக்கங்கள்

விலை ரூ. 3

# தொடுவான மனிதர்கள்

## 4

"அக்கா.... சாமினாதனும் நானும் அவர் சைக்கிள் எடுத்து விட்டுட்டிருந்தப்ப சாமினாதன் சைக்கிளைப் போட்டுண்டு கிழே விழுந்துட்டான்க்கா... கால் மேல் சைக்கிள் விழுந்ததுல பாதமெல்லாம் புசுபுசுன்னு வீங்கிப் போச்சுக்கா... வலிக்கிறதுன்னு ஓரேயடியா அழறான்க்கா... எனக்கு என்ன பண்றதுன்னு தெரியலைக்கா...?"

"இதோ நான் கிளம்பி வரேன். அது வரை நீ சாமினாதன் கூட இரு. எங்கேயும் போயிடாதே... என்ன....?"

"சரிக்கா...."

போனை வைத்து விட்டு ராதிகா ராம்குமாரிடம் வந்தாள். அவளது முகத்திலிருந்த அவசரத்தையும், படபடப்பையும், பதற்றத்தையும் பார்த்து ராம்குமார் கேட்டான்:

"என்ன ராதி....?"

"நான் உடனே வீட்டுக்குக் கிளம்பியாகணும் ராம்குமார்...."

"என்ன விஷயம்.....?"

சொன்னதும் அவன் அவளைப் போல் பதற்றப்படவில்லை. படபடக்க வில்லை. ஒரு வினாடி யோசித்தான். அந்த நிதானம் அவளுக்குத் தாங்கவில்லை.

இண்டர்காமில் ஷீலாவையும், சடகோபனையும் கூப்பிட்டு ஆபீஸ் விஷயமாகச் சிலவற்றைச்சொல்லிவிட்டு,"வாபோகலாம் என்று அவளுடன் புறப்பட்டான்.

"நீங்களும் வரீங்களா....?"

"பின்னே... உன்னை மட்டும் தனியா அனுப்பிடுவேன்னா நினைச்சே....?"

சாமினாதனின் கால் நன்றாக வீங்கியிருந்தது. தேம்பிக் கொண்டிருந்த அவனைத் தேற்றி ஒரு குழந்தையைப் போல் அலுங்காமல் தூக்கிக் கொண்டான் ராம்குமார். அபிராமபுரத்திலிருந்த தனக்கு மிகவும் தெரிந்த ஆர்த்தோபெடிக் டாக்டரிடம் அழைத்துப் போனான்.

எக்ஸ்ரே எடுக்கச் சொல்லி,பாதத்தின் ஓரிடத்தில் சின்ன எலும்பு முறிவு இருப்பதை காட்டிய டாக்டர், சாமினாதனின் முழங்காலிலிருந்து பாதநுனி வரை பிளாஸ்டர் போட்டுவிட்டார்.

"இன்னும்ரெண்டு வாரத்துக்குப் பிளாஸ்டர் இருக்கணும் ராம்குமார். தண்ணி படாமல், குளிக்கிற போது பிளாஸ்டிக் பைகட்டி, காலைத் தூக்கி வைச்சுக் குளிக்கச் சொல்லுங்க. மற்றபடி ஒண்ணுமில்லே. இன்னும் பதினைந்தே நாள்ல சரியாப் போயிடும்" என்றார்.

"ஸ்கூலுக்குப் போகலாமா டாக்டர்...?" ராம்குமார்தான் கேட்டான்.

"ஓ. எஸ். நோ பிராப்ளம்...." என்ற டாக்டரின் பார்வை அவர்களுடன் வந்திருந்த ராதிகாவின் மீது பதிந்ததும், "என்ன ராம்குமார்... எங்களையெல்லாம் கல்யாணத்துக்குக் கூப்பிடவே இல்லை...?" என்றார்.

ராதிகாவின் முகம் குப்பென்று சிவந்தது. உடம்பில் உஷ்ணம் ஓடிற்று. தலையைக் குனிந்து கீழ் உதட்டைக் கடித்துக் கொள்ள, ராம்குமார் தன் வழக்கமான புன்னகையுடன் சொன்னான்.

"கல்யாணம் நிச்சயமாகிப் பத்திரிகை அடிச்ச உடனே முதல் இன்விடேஷன் உங்களுக்குத்தான் டாக்டர்....."

"ஓ...... என்று சந்தோஷமாகச் சிரித்தார் டாக்டர்.

வீட்டுக்கு வந்து தரையில் பாய் விரித்துச் சாமினாதனைப்படுக்கவைத்தராம்குமாரின் கழுத்தைக் கட்டிக் கொண்டான் அவன்.

"என்ன சாமி...?"

"நீங்க போகாதீங்க மாமா.... இன்னிக்கு என் கூடவே இருங்க மாமா...."

"ஏன் சாமி... அக்கா, பாட்டி. அம்மா எல்லாரும் இருக்கா இல்ல....?"

"ம்ஹூம். எனக்கு நீங்கதான் வேணும். இருங்க மாமா... ப்ளீஸ் மாமா..."

அவனுக்கும், ராதிகாவிற்கும் காப்பி கலந்து கொண்டு வந்த பாட்டி, அதைக் கேட்டுக் கொண்டே உள்ளே நுழைந்தவளாகச் சொன்னாள்.

"குழந்தை ஆசைப்படறானில்ல...? இருந்துட்டுப் போறது...." ராம்குமார் காப்பி டம்ளரை வாங்கிக் கொண்டே பாட்டியைப் பார்த்தான்.

"பாட்டி சொல்லிட்டா சரி.... நீங்க என்ன சொல்லுவீங்களோ... பார்க்கிறவா தப்பா நினைச்சுப்பாளோன்னுதான் சாமி கேட்டப்ப தயங்கினேன்...."

"நன்னாயிருக்கு...." இதுல யார் என்ன சொல்ல இருக்கு? யார் என்ன நினைச்சுண்டாத்தான் என்ன...? நாளைக்கு மாப்பிள்ளையாகப் போற உங்களை இன்னிக்கே தங்கச் சொல்லிக் கேட்கிறான் குழந்தை. அதுல என்ன தப்பு....? இப்படி ஊர் வாய்க்குப் பயந்ததும் அடிபட்டதும் என் பொண்ணோட போகட்டும். ராதிகாவாவது உங்க

இந்துமதி

ளோட சந்தோஷமா சிரிச்சுண்டிருக்கணும்னு நான் தினமும் ஸ்வாமியை வேண்டிண்டிருக்கேன்.

ஒரு வினாடி ராம்குமாருக்கு மனசு சிலிர்த்தது.

பாட்டி சற்றுத் தயங்கிச் சொல்லலாமா வேண்டாமா என்று யோசித்துப் பின் சொல்ல முடிவு செய்து விட்டவளாகத் தொடர்ந்தாள்.

"....நானே உங்ககிட்ட இதைப் பத்திப் பேசணும்னு நினைச்சுண்டிருந்தேன். உங்களுக்கும் சொந்தம்னு சொல்லிக்க யாருமில்ல.... எங்களுக்கு இருந்தும் இல்லா

பாட்டியின் பெரிய மனத்திற்குக் கை கூப்பத் தோன்றிற்று. எது பேசவும் வாய் எழாமல் குரல் அடைத்துக் கொண்டது.

அவனது மௌனம் என்னவோபோலிருக்க, பாட்டி சங்கடப்பட்டுப் போனாள்.

"ஏன் மாப்பிள்ளை.... நான் ஏதாவது அத்து மீறிப் பேசிட்டேனா....?"

"இல்லவே இல்லை பாட்டி! என் மனசு சிலிர்த்துப் போச்சு. ஆனால் எனக்கு மட்டும் யாரு இருக்கா கல்யாண ஏற்பாடு செய்ய....? எதுவானாலும் நீங்க பார்த்துச் செய்யுங்க பாட்டி....."

அப்போதுதான் பாட்டி முதல் முறையா



தவாளாயிட்டா. இப்போ உங்களுக்கு நாங்க — எங்களுக்கு நீங்கன்னு ஆயிட்டப்புறம் பெரிசா தடபுடல் பண்ணாம ஆபீஸ்காரானை மட்டும் கூப்பிட்டு ஏதாவது ஒரு கோவில்ல கல்யாணத்தை முடிச்சுண்டு இந்த விட்டோடு வந்து சேர்ந்துடுங்களேன் மாப்பிள்ளே.... அதுக்கு சீக்கிரம் நல்ல நாளா ஒண்ணு பாருங்களேன்...."

அவனுக்குக் கண்ணிமைகள் நனைந்தன.

க்க் கண்கலங்கினாள்.

"கல்யாண காரியம். நல்ல விஷயம். இந்தக் குடும்பத்துல முதல் முதலா ஒரு மங்களகரமான காரியம் நடக்கப் போறதுக்கு நான் எப்படிப்பா முன்னே நிக்க முடியும்.... பொண்ணுக்கு அம்மா....! அவ செய்யலாம்... தன் புலம்பலே பெரிசுன்னு மூலைல அடைஞ்சு கிடக்கறா.... என் பிள்ளையையோ, மாட்டுப் பொண்

ணையோ கேட்கலாம்னா அதுக்கு மனசு இடம் கொடுக்கலையே....''

''வேணாம் பாட்டி... அந்த மாதிரி நீங்க யார்கிட்டேயும் போய் நிக்க வேணாம். எங்க கம்பெனி சேர்மென் வரட்டும். அவர் அமெரிக்காவிலேருந்து பதினைஞ்சு நாள்ல திரும்பிடுவார்னு நினைச்சேன். ஆனா இப்போ லண்டன், ஜெர்மெனியெல்லாம் போயிட்டு வர ஒரு மாசம் ஆகும் போல இருக்கு. அவர்கிட்ட சொன்னால் அவரே முன்னே நின்னு எங்க கல்யாணத்தை நடத்தி வச்சிடுவார் பாட்டி. அவ்வளவு பெரிய கோடீஸ்வரன் ஆனாலும் ரொம்ப நல்ல மனசு. அவர் வந்துட்டால் யார் தயவும் வேணாம் நமக்கு. அதனால் அவர் வரட்டு மேன்னு காத்துண்டிருக்கேன்...''

**அ**ன்றைக்கு ராம்குமார் அங்கு தங்கினான். அதுபோல் அடிக்கடி தங்குவதும் வழக்கமாயிற்று.

சிவா, சாமினாதனுடன் கிரிக்கெட், கேரம் என்று விளையாடுவான். சிவாவிற்



நிருபர்: எதுக்கு உங்க கணவரை டைவர்ஸ் செய்யணும்ங்கறீங்க?''

நடிகை: அவருக்கு என்னோட மற்ற கணவர்களுடன் ஒத்துப் போகத் தெரியலையே!

— கீழை. அ. கதிர்வேல்.

குக் கணக்கு சொல்லித் தருவான்; சாமினாதனுக்கு இந்தி சரியாக வராது என்பதால் வற்புறுத்திப் படிக்க வைப்பான்.

''பாட்டி... கண் டாக்டர்கிட்ட போகணும்னு சொன்னீங்களே... டாக்டர் ரவீந்திரன்னு ஒரு நல்ல டாக்டர். இன்னிக்கு அப்பாய்ண்ட்மெண்ட் வாங்கிண்டு வந்திருக்கேன். கிளம்புங்க...'' என்று அவசரப் படுத்துவான்.

பாட்டியின் காடராக்ட் ஆபரேஷனுக்கு ஏற்பாடு செய்து, அது முடிந்த ஐந்தாவது நாள் அவனே பாட்டியை வீட்டிற்குக் கூட்டி வந்தான்.

பாட்டி... இனிமேல் கண் நன்னாத் தெரியும் பாருங்க... ஒரு தொந்தரவு இருக்காது.... தலைக்கு மட்டும் கொஞ்ச நாளைக்கு ஜலம் விடாதீங்க...'' என்றான்.

அன்றைக்குப் பாட்டி அவன் கைகளைப் பற்றிக் கொண்டு உணர்ச்சிப் பெருக்கில் தடுமாறினாள்.

குடும்பத்தில் ஒருவனாகப் பழகி, அந்த மாதிரி அனேக தடவைகள், பாட்டியை நெகிழ்ந்து நெஞ்சுருகிப் போகச் செய்தான் ராம்குமார்.

''பாட்டி... ராதிகாவைக் கொஞ்சம் வெளில அழைச்சுண்டு போயிட்டு வரேன். திரும்ப மணி எட்டரை ஒன்பதுன்னு ஆனாலும் பயப்படாதீங்க'' என்று சொந்த விஷயங்களுக்காக ஆபீஸ் காரை உபயோகப்படுத்தாமல் தான் வாங்கி வைத்திருந்த ஸ்கூட்டரின் பின்னால் ராதிகாவை உட்கார வைத்து ஓட்டிக் கொண்டு போகிற போது—

பாட்டி உள்ளே வந்து ஜெபமணி மாலையை உருட்டுவாள். ஜெபத்திற்குப் பதிலாக வார்த்தைகள் தன் இச்சையாய்ப் பிரார்த்தனையாய் வெளிவரும்.

''சின்னஞ் சிறுசுகள் எத்தனை அழகா, பொருத்தமா, பாந்தமா இருக்கிறதுகள்! பார்க்கிறவா கண் படாம அவாளை நன்னா வைடாப்பா ஈஸ்வரா... சீக்கிரமே அவா சேர்மெனாமே... அவனை வரவழைச்சு, கல்யாணத்தை நல்லபடி முடிச்சு வச்சுடு டாப்பா... சர்வேஸ்வரா....''

**பா**ட்டியின் பிரார்த்தனைக்கு இறங்கியோ என்னவோ கார்த்திகேயன் வெளிநாட்டிலிருந்து திரும்பி வந்து விட்டான். அலுவலகத்தினுள் நுழைந்த போதே ராதிகாவைப் பார்க்க வேண்டுமென்று தோன்றியது அவனுக்கு. தன் எண்ணத்தை, தான் அவளைப் பற்றி நினைத்துக் கொண்டிருப்பதைச் சொல்லி விட முடிவு செய்து தன் அறைக்குள் நுழைந்த உடனேயே அவளைக் கூப்பிட்டனுப்பினான்.

''குட்மார்னிங் சார்...'' என்று உள்ளே நுழைந்தவளைப் பார்த்து அவன் கண்கள் அகன்றன. முதல் முதலாகத் தன் அறைக்குள் நுழைந்த ராதிகாவிற்கும், இந்த ராதிகாவிற்கும் இருந்த வித்தியாசத்தைப் புரிந்து கொண்டான். முகத்திலிருந்த அத்தனை சோகத்தையும் யாரோ துடைத்து எடுத்துக் கொண்டு போய் விட்டிருந்த மாதிரி இருந்தது. கண்களிலிருந்த பயம் மறைந்து பளபளத்தது. ஏற்கெனவே நிகுநிகுவென்றிருக்கும் நிறம் கூடி உடம்பில் லேசாகச் சதை பிடித்து....

''வாவ்....!'' என்று தோள்களைக் குலுக்கினான்.

''ஃபாரின் போனது நானா நீயான்னு சந்தேகமாக இருக்கு ராதிகா...'' என்று சிரித்தான்.

''எனிவே... உன்னை இப்படிப் பார்க்க சந்தோஷமாக இருக்கு. கீப் இட் அப்...''

''தாங்க்யூ சார்...'' என்று புன்னகை செய்தாள் அவள். பின்னர் அவனில்லாத ஒரு மாதத்தில் நடந்த வேலைகளை மடமட

# கேதான் விசிறிகளே வருக
# விழாக்கால சலுகை பெறுக!

## ரூ 25/- தள்ளுபடி

தீபாவளி வரை மட்டுமே.







சலுகைகள் சீலிங், போர்டபிள்
பிரஷ்ஏர் விசிறிகளுக்கு
1988 நவம்பர் 10-ம் நாள் வரை.

# கேதான்

பெயர் ஒன்றே போதுமானது

# முயற்சி + பயிற்சி = முன்னேற்றம்

நீங்கள் உங்களுடைய நண்பர்களுடன் உரையாடிக் கொண்டிருக்கும்போது அவர்களிடம் "உங்களில் எத்தனைபேர் வாழ்க்கையில் முன்னேற விரும்புகிறீர்கள்?" என்ற ஒரு கேள்வியைக் கேட்டுப் பாருங்கள். உடனே அனைவரும் கையை உயர்த்துவார்கள். ஏனென்றால் இவ்வுலகில் முன்னேற விரும்பாதவர்கள் எவரும் இல்லை.

அடுத்ததாக "உங்களில் முன்னேறுவதற்கான முயற்சியில் ஈடுபட்டுள்ளவர்கள் எத்தனைபேர்? என்று மற்றொரு கேள்வியைக் கேளுங்கள். முதற்கேள்விக்கு சட்டென கையை உயர்த்தியவர்கள் இப்பொழுது என்ன பதிலளிக்கலாம் என்று யோசிக்கத் தொடங்கி விடுவார்கள்.

பெரும்பாலானவர்கள் வாழ்க்கையில் முன்னேற வேண்டும் என்று விரும்புகிறார்கள் ஆனால் அதற்கான முயற்சியில் ஈடுபடுவதில்லை. உதாரணமாக நம்மில் பலர் ஆங்கிலத்தில் பேசவேண்டும் என்று விரும்புகிறோம். விருப்பம் மட்டும் இருந்தால் போதுமா? அவ்விருப்பத்தை நிறைவேற்றும் வழி என்ன என்று யோசித்து, அதற்கான முயற்சியில் ஈடுபட்டு முறையான பயிற்சி பெறவேண்டுமல்லவா?

தமிழகத்தின் தலைசிறந்த கல்வி நிலையம் என்ற தனிப் புகழ் பெற்ற விவேகானந்தா கல்வி நிலையத்தைப் பற்றி நீங்கள் கேள்விப்பட்டிருப்பீர்கள்.

இக்கல்வி நிலையம் அளிக்கும் ஓர் எளிய பயிற்சியை மேற்கொண்டால் நீங்கள் தயக்கமின்றி ஆங்கிலத்தில் உரையாடவும் இலக்கண பிழையின்றி கடிதங்கள், கட்டுரைகள் எழுதவும் முடியும்.

வீட்டிலிருந்தபடியே ஓய்வு நேரத்தில் இப்பயிற்சியை மேற்கொள்ளலாம். "நேர்முகப் பயிற்சியும் உண்டு."

ஆங்கிலத்தில் பேசவேண்டும் என்ற உங்களது விருப்பத்தை இன்றே ஒரு தபால் கார்டில் எழுதி "விவேகானந்தா கல்வி நிலையம் (Regd.) 9, மேட்லி ரோடு, தி. நகர், சென்னை 17. என்ற முகவரிக்கு அனுப்புங்கள் உடனே நாங்கள் இப்பயிற்சி பற்றிய மற்ற தகவல்களை அனுப்பி வைக்கிறோம்.

உங்களது முயற்சியும் எங்களது முறையான பயிற்சியும் இணைந்தால் ஆங்கிலத்தில் பேசவேண்டும் என்ற உங்களது, நீண்ட நாளைய விருப்பம் நிச்சயம் நிறைவேறும்.

**Ambition without Effort is Like a Bird without wings.**

வென்று ஒப்பிக்க ஆரம்பித்ததும் சட்டென்று அடக்கினான்.

''நோ... நோ... இன்னிக்கு இதெல்லாம் வேணாம். இதையெல்லாம் நாளைலேருந்து ஆரம்பிச்சுக்கலாம். இன்னிக்கு நான் ஆபீசுக்கு வந்ததுக்கு முக்கியமான காரணம் ஒண்ணு இருக்கு. கேன் யு கெஸ் வாட் இட் ஈஸ்...?''

கண்கள் பளபளக்க, மிகுந்த ஆர்வத்துடன் அவன் கேட்டதும் அவள் யோசனை செய்து மெதுவாகத் தலையாட்டினாள்.

''நோ... சார்...''

கண்களில் தெரிந்த ஆர்வம் மாறாமல் அவன் சொன்னான்: ''அவசரமாக ரெண்டு மூணு ஓவர்ஸீஸ் கால் பண்ணிப் பேசிட்டு உன்னைக் கூப்பிடறேன். அதுவரை கேன் யு வெயிட் ஃபார் மீ...?''

''சர்ட்டென்லி சார்....''

**வெ**ளியில் வந்ததும் ராம்குமாரிடம் விஷயத்தைச் சொல்லி, ''என்ன பேசப் போறார்னு தெரியலையே...'' என்ற போது குரலில் தொனித்த கவலை அவனைச் சற்று யோசிக்க வைத்தது. பின்னர் யோசித்த விஷயம் சட்டென்று பிடிபட்ட மாதிரி சொன்னான்.

''நம்மைப் பத்தி யாரோ அவர்கிட்ட சொல்லியிருக்காங்கன்னு நினைக்கிறேன் ராதிகா. நேத்து ஏர்போர்ட்டுக்கு ராகவன் போயிருந்தாரில்ல... அவர் சொல்லியிருக்கணும். அதைப் பத்தித்தான் உன்கிட்ட கேட்கப் போறார்னு தோணறது ராதிகா...''

''அப்படின்னா முதல்ல உங்களைத் தானே கூப்பிட்டுக் கேட்பார். என்னையில்லையே....?''

ஒரு வினாடி யோசித்த ராம்குமாரின் முகத்தில் வருத்தம் படர்ந்தது.

''அவருக்கு என் மேல கோபமாக இருக்கும் ராதி. இத்தனை வருஷம் கூட இருந்து, நெருக்கமா பழகி, நானே சொல்லலைன்னு நினைச்சுண்டிருப்பார். யார் மூலமோ கேள்விப்பட நேரிட்டதே என்ற வருத்தமாகக் கூட இருக்கும். அது தப்புத்தான் ராதி. அவரா உன்னைக் கூப்பிட்டுக் கேட்கிறதுக்கு முன்னால நாம போய்ச் சொல்லிடலாம். நீங்கதான் சார் எங்க கல்யாணத்தை நடத்தி வைக்கணும்னு கேட்டுக்கலாம். கமான், எழுந்திரு ராதி... கொஞ்சம் இரு... முதல்ல பர்மிஷன் கேட்டுக்கறேன்...'' என்று இன்டர்காமை எடுத்துப் பேசினான்:

''....சார்... ராம்குமார் சார். ஃபைவ் சார். ஐ ஜஸ்ட் வாண்ட் டு ஸ்பீக் டு யு ஃபார் ஃபைவ் மினிட்ஸ் சார். ஓ.கே. சார். தாங்க் யூ சார்....''

இண்டர்காம் கருவியைப் பொருத்தி விட்டு,

''வரச் சொல்றார் ராதி... வா போகலாம்....'' என்று முதல் முறையாகத் தன் அமைதி, நிதானம் இரண்டும் சற்று குறைய ஓரளவு பதற்றத்துடனே எழுந்து கொண்டான் அவன்.....

(தொடரும்)

# அடுத்த இதழில்



## கவர் ஸ்டோரி:

## டீ.வி மகாபாரதம்

சின்னச் சின்னச் செய்திகள்:

# சாலை ஓர 'ஷவர் பாத்'

● லண்டனில் உள்ள இந்தியா ஹவுஸில் பாலகங்காதர திலகர், சத்ரபதி சிவாஜி ஆகியோரின் வண்ண ஓவியங்களை முதல் மாடியில் பார்வையாக மாட்டியிருந்தனர். 'அவற்றை இப்போது கழற்றித் தட்டு முட்டுச் சாமான்கள் போடும் பாதாளக் கிடங்குக்கு அனுப்பி விட்டார் இந்திய ஹை கமிஷனர்' என்று வருத்தத்துடன் குற்றம் சாட்டியிருக்கிறது கேசரி மராத்தா டிரஸ்ட்.

● காரில் ஏறிக் கொண்டு டூர் கிளம்புகிறார். வழியில் ஓர் ஏரி, குளத்தைப் பார்க்கிறார். களைப்புத் தீரக் குளிக்க வேண்டும் போலிருக்கிறது. ஆனால் நீந்தத் தெரியாது. ஆழம் தெரியாமல் காலை விட்டு விடுவோமோ என்ற பயம்! என்ன செய்வது? கார் டிக்கியைத் திறந்து ஷவர் பாத் உபகரணத்தை எடுக்க வேண்டியது. அதனைக் கார் இஞ்சினுடன் குறிப்பிட்ட இடத்தில் இணைக்க வேண்டியது. ஹோஸ் பைப்பின் ஒரு முனையை ஏரி நீரில் விட்டு மறுமுனையில் உள்ள ஷவரை, ஸ்டாண்டில் பொருத்த வேண்டியது. கியரை நியூட்ரலில் தள்ளி, கார் இஞ்சினைக் கிளப்பினால் பூப்பூவாக வெந்நீர்த் துளிகள் விழும். ஷவர் பாத் எடுக்கலாம்! குளிர்ந்த நீரில் குளிக்க விரும்பினால் காரின் ரேடியேட்டர் இணைப்பைத் துண்டித்து விட்டால் போதும்; ஜில் ஷவர்! இது ஆஸ்திரேலியத் தயாரிப்பு என்கிறது நியூஸ் வீக்.





● மேகாலயாவில் கல்வித் துறை தொடர்பாக விவாதம் நடந்த போது தெரிய வந்த ஒரு பயங்கர உண்மை: அங்கு தொடக்கப்பள்ளி ஆசிரியர்கள் பலர் எழுதப் படிக்கத் தெரியாதவர்கள்! கைநாட்டு வைத்துச் சம்பளம் பெற்றுக் கொள்கிறார்கள்!

● காந்திஜி எழுதிய எண்பது கடிதங்கள், தென் ஆப்பிரிக்காவில் அவர் இருந்த போது எடுக்கப்பட்ட அபூர்வ புகைப்படங்கள், மௌன விரதத்தின் போது அளித்த பேட்டிக்காக அவர் எழுதிக் காட்டிய பதில்கள் முதலியன சமீபத்தில் ஏலம் விடப்பட்டன. கிடைத்த தொகை ஒன்றரை லட்சம் டாலர்! ஏலம் விட்டவர், தென் ஆப்பிரிக்காவில் காந்தி வழக்கறிஞராகத் தொழில் நடத்திய போது அவருடைய பார்ட்னராக இருந்த ஹென்றி போலக்.

● கோதுமை, அரிசி, சோளம், தேங்காய், ஆப்பிள், பேரீச்சம்பழம், முந்திரிப் பருப்பு, கிஸ்மிஸ், முதலியவற்றைச் சேர்த்து அரைத்து மாவாக்கிக் கொஞ்சமாகச் சர்க்கரை கலந்து வைத்துக் கொள்ளுங்கள். தினம் இதில் கொஞ்சம் எடுத்துக் காய்ச்சிய பாலைக் கலந்து கூழாக்கிச் சாப்பிட்டுப் பாருங்கள். எப்படி இருக்கும்?

"பிரமாதமாக இருக்கும்" என்கிறது கிளிண்டியா நிறுவனம். "உடம்புக்கும் நல்லது. காலை உணவாக அவசரத்துக்கு அருந்திச் சென்றால் லஞ்ச் டைம் வரை தாக்குப் பிடிக்கலாம். அத்தனை சக்தியை உள்ளடக்கியிருக்கிறது!"

"அதுசரி, யாரால் அரைத்துச் சலித்துக் கொண்டிருக்க முடியும்?" என்று கேட்பவர்களுக்கு, "இதோ ரெடிமேடாக இருக்கிறது" என்று கூறி விற்பனைக்கும் கொண்டு வந்துள்ளது கிளிண்டியா. ஒரு ஸ்விஸ் டாக்டரின் யோசனைப்படி தயாராகியுள்ள, இந்தச் சத்துணவின் பெயர்: 'பானி மிக்ஸ்.' ஆண்டு நிறைவைக் கொண்டாடிய குழந்தைகளுக்கும் கொடுக்கலாமாம்.

— ஜூவலி; சித்தார்த்.

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர் வி. வைத்தியநாதன். ஆசிரியர்: கி. ராஜேந்திரன்.
முகவரி: ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை — 600 032. போன்: நிர்வாகக் காரியாலயம்: 4 3154 3, 4 34 157; ஆசிரியர் குழு அலுவலகம்: 4 34 14 5.
ஆண்டுச் சந்தா — உள்நாடு: ரூ. 104/—; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 280/—; விமானத் தபால் ரூ. 680/—.
அறுமாதச் சந்தா — உள்நாடு: ரூ. 52/—; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 140/—; விமானத் தபால் ரூ. 340/—.

# என்றும் மிளிரும் நட்சத்திரங்கள்.

The Thapar G

மறக்கத்தான் முடியுமா 'உம்ராவ் ஜான்' படத்திலே ரேகா நடிப்பின் சிகரத்தை எட்டியதை! காவியச் சிறப்புகள் நிறைந்த இந்த திரைப்படம் காலமெல்லாம் நிலைக்கும், இதயத்தை உருக்கும், இன்பத்தை பெருக்கும்.

ரேகா திறமையாக நடித்துள்ள பல படங்களில் இதுவும் ஒன்று.

அதே வகையில் என்றும் பிரகாசிக்கும் மற்றொரு நட்சத்திரம் பற்றி உங்களுக்கு தெரிவிக்கிறோம்.

அதுதான் கிராம்ப்டன் கிரீவ்ஸ் கலர் டிவி.

இது மிக நவீன தொழில்நுட்பங்கள் பொருந்திய டெலிவிஷன் —உங்கள் உடமையாக்கக் கூடிய இந்த விசேஷ டிவி, பல சிறப்பம்சங்களைக் கொண்டதாகும்.

இதைவிட பரிபூரண 12-மாத உத்தரவாதம் தருகிறது. மிக விலையுயர்ந்த பகுதியான பிக்சர் ட்யூபுக்குக்கூட இதன் காப்புறுதி உள்ளது.

இணையில்லா ஸர்விஸ் பின்பலம் உள்ளது.

நினைவிருக்கட்டும் காலமெல்லாம் உங்கள் நம்பிக்கைக்கு உரியது கிராம்ப்டன் கிரீவ்ஸ்.

ஆம், காத்துக்கொள்ள வேண்டிய எங்கள் பெயரும் புகழும் மிகப் பெரியது அன்றோ.



Crompton Greaves

## கிராம்ப்டன் கிரீவ்ஸ் டிவி
## ஒளியில், பல்லாண்டு இன்பமூட்டும் சாதனங்கள் சில உண்டு.

ப்ராஞ்ச் ஆபீஸ் : நம். 3 ஏ, கோடம்பாக்கம் ஹைரோடு,
த.பெ. நம். 3316, நுங்கம்பாக்கம், சென்னை-600 034 ☎போன் : 47 0316, 47 4741.

Enterprise/CGL/24 T

